மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

மாலை—24





உரையாசிரி

ஆங்கீரஸ S வே

சங்

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

# மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

(சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிக வெளியீடு)

## மாலை—24

உரையாசிரியர் :

சிவபக்திப் பிரசாரமணி, திருத்தொண்டர்மாமணி, சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ரப் பிரசார பூஷணம், சிவபுராணக் காவலர், சிவபுராணச் சக்கரவர்த்தி,

ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா

(சங்கரன் அடிமை)



பிரசுரம் :

ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா

43, ஏழாவது அவென்யூ

அசோகநகர், சென்னை - 600 083.

 18-2-1992 [விலை. 4-00

உ

# விநாயகர் துதி



திருச்சிற்றம்பலம்

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே.

திருச்சிற்றம்பலம்

## பொருளடக்கம்

5-2

உ

சைவ சமயாசாரியர்

# நால்வர் துதி











| திருஞான சம்பந்த சுவாமிகள் | திருநாவுக் கரசு சுவாமிகள் | சுந்தர மூர்த்தி சுவாமிகள் | மாணிக்க வாசக சுவாமிகள் |
|---|---|---|---|

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் நம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும் - முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே.

# திருஞானசம்பந்த சுவாமிகள்



புகலி வந்த புண்ணியன், கவுணியர் குலக் கொழுந்து, வாரணங்கு முலை உமையாள் குழைத்த செம்பொன் வள்ளத்தில் அமுதுண்ட வள்ளல், தமிழ் வேதம் தந்த பிரான், அருங்கலைச் சிறுமழ இளங்களிறு, நாளும் நல்லிசையால் நற்றமிழ் பரப்பிய

**திருஞானசம்பந்த சுவாமிகள்**



5·2

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்



## ஸமர்ப்பணம்

### ஓம் கபாலிநே நம:

சிவபெருமானின் அருச்சனைக்குரிய 108 திருநாமங்கள் சிவாஷ்டோத்தரசத நாமாவளி எனப்படும். இவைகளில் 24வது திருநாமம் கபாலி எனப்படும். இத்திருநாமத்துக்கு பிரமகபாலத்தைக் கையில் தாங்கியவர் என்பது பொருளாகும். இறைவர் பிரமகபாலத்தைத் தாங்கியதைத் திருஞானசம்பந்தப் பெருமான் பலதிருப்பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். விரிவு கந்தபுராணம் ததீசி உத்தரப் படலத்தில் காணலாம்.

சிவபரத்துவத்தைப் புலப்படுத்தும் இந்த 24வது நாமாவான ஓம் கபாலிநே நம: என்ற திருமந்திரத்தினுல் அருச்சனை செய்து, இந்த 24வது தமிழ் மாலையை சிவபெருமானது திருவடிகளில் ஸமர்ப்பிக்கும் சிவபுண்ணியப் பேற்றினைப் பெறுகின்றேன்.

ஆங்கீரஸ சர்மா.

சிவம் உரையாசிரியர்.



உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை

## புதிய சந்தா விகிதம் அறிவிப்பு

காகிதவிலை, அச்சுக்கூலி மற்றும் தயாரிப்பு செலவு முதலிய அனைத்தும் கற்பனைக்குமெட்டாத அளவுக்கு உயர்ந்துவிட்டதால் நமது தமிழ் மாலைகள் சந்தா விகிதத்தைப் பின் வரும் விவரப்படி உயர்த்த நேரிட்டது என்பதை தெரிவித்துக் கொள்கிறோம். இப்பொழுதுள்ள விலைக்கு 64 பக்கங்கள்கூடப் பிரசுரிக்க இயலாத நிலை ஏற்பட்டுள்ளதையும் புதிய விலைக்கு 80க்கு மேல் 96 பக்கங்கள் வரை பிரசுரிக்க முயற்சி செய்வோம் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

### புதிய விகிதம்

| | | |
|---|---|---|
| 25-வது தமிழ் மாலை முதல் தனிப்பிரதி | ரூ. | 6-00 |
| ஒவ்வொரு ஆறுபிரதிகளுக்கும் சலுகை விலை | ரூ. | 30-00 |
| 108 தமிழ் மாலைகளுக்கும் சலுகை விலை | ரூ. | 320-00 |

சலுகை விலைகள் பிரசுரமாவதற்கு முன் செலுத்தப்பட்டால் தபால் செலவு இலவசம். பிரசுரமான பின் தபால் செலவு தனி. முன் பணம் கிடைத்தவுடன் இது வரை பிரசுரமான தமிழ் மாலைகள் உடனடியாக அனுப்பப் பட்டு, மற்றவை அவ்வப்போது பிரசுரமானதும் வேறு செலவு ஏதுமின்றி அனுப்பி வைக்கப்படும்.

உரையாசிரியர்—பதிப்பாசிரியர்

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

43, 7-வது அவென்யூ

அசோகநகர், சென்னை - 600083,

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# உரையாசிரியர் பணிவுரை

திருச்சிற்றம்பலம்

பொன்னார் மதில்சூழ் புகலிக் கரசை அருகர்தங்கள்
தென்னாட் டரணட்ட சிங்கத் தினையெஞ் சிவனிவனென்(று)
அந்நாள் குதலைத் திருவாய் மொழிகள் அருளிச்செய்த
என்னானை யைப்பணி வார்க்கில்லை காண்க யமாலயமே.

திருச்சிற்றம்பலம்

—ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி—43
(11-ம் திருமுறை)

"அழகிய மதில்கள் சூழ்ந்த திருப்புகலி என்னும் சீகாழிக்கு அரசனை, தென்னாட்டில் சமணர்களுடைய கோட்டையைத் தகர்த்த சிங்கத்தை, எமது கடவுளாகிய சிவபிரான் இவன் என்று சுட்டிக்காட்டி அந்நாள் குழந்தைப் பருவத்திலேயே பாடியருளிய என் தலைவனாகிய திருஞானசம்பந்தப் பெருமானை வணங்குவார்க்கு இயமனுடைய இடத்துக்குச் செல்லுதல் இல்லையாம்" என்று நம்பியாண்டார் நம்பிகள் துதித்துப் பாடிய கவுணியர் குல திலகத்தை, அப்பெருமானது திருப்பதிகங்களுக்கு உரைகாணுதல் என்ற முறையில் யாமும் வழிபட்டு வருகின்றோம். இவ்வழிபாட்டு முறையில் இதுவரையில் 23 தமிழ்மாலைகளை வெளியிட்டுள்ளோம். இப்பொழுது வெளியிடப்படும் இந்த 24-வது தமிழ் மாலையில் திருஞானசம்பந்த சுவாமிகள் தமது ஐந்தாவது தலயாத்திரையில் தொடர்ந்து தரிசித்துப் பாடிய திருத்தலங்களில் திருப்பாண்டிக்கொடுமுடி, திருக்கருவூரானிலை, திருப்பராய்த்துறை, திருக்கற்குடி, திருமூக்கீச்சரம், திருச்சிராப்பள்ளி ஆகிய ஆறு திருத்தலங்களின் திருப்பதிகங்

களை வழக்கம் போல பதிகவரலாறு, பொழிப்புரை, விளக்க வுரை, தலவரலாறு முதலிய உரை விசேடங்களோடு கொடுத்துள்ளோம்.

இது வரையில் உதவியது போலவே இந்த மாலைக்கும் அரிய விளக்கம் தந்து உதவியவர்கள் இராணிப்பேட்டைப் புலவர், நக்கீரன் வழியடிமை, திரு. பி. மா. சோமசுந்தர ஞர், கோவை. அறிஞர் திரு. சி. சு. கண்ணுயிரம் ஆகியோர் ஆவர். திருவருள் வலத்தால் நமக்குத் தமது நண்பினைத் தந்த தில்லியூர்ச் சிவனடியார் Dr. M. குப்புசுவாமி (பெங் களூர்) அவர்களும் தமது அரிய கருத்தினை உதவியுள்ளார் கள். அறிஞர் பெருமக்களாகிய இவர்களுக்கு எமது மன மார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த 24-வது தமிழ் மாலை வெளிவரப் பொருளுதவி செய்தவர்கள் பெங்களூர் சிவதாஸ லக்ஷ்மணன் ஐயர் அவர் களும் சென்னை திரு. தே. ச. குருநாதன் அவர்களும் ஆவர். இவர்கள் இருவருமே வலியவந்து இந்தப் பேருதவியைச் செய்தார்கள். தங்களைப் பற்றிய குறிப்புகள் ஏதும் குறிப் பிடவும் இவர்கள் விரும்பவில்லை. இவ்விரு மெய்யன்பர் களும் நீடு வாழ்ந்து மேலும் மேலும் சிவபுண்ணியத்தை ஈட்ட சிவபரஞ்சோதியின் திருவருள் துணை நிற்க எனப் பிரார்த்திக்கின்றோம். மிக எளியோமாகிய எம்மையும் இவ்வரிய பணியில் ஈடுபடுத்திய திருவருளை வியந்து போற்று கிறோம்.

எல்லாம் சிவன் செயல்



சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்



# மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை - 24

## திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியவை

(தொடர்ச்சி)

## திருப்பாண்டிக்கொடுமுடி

பதிகவரலாறு : திருக்கொடிமாடச்செங்குன்றூரில் திருநீலகண்டத்திருப்பதிகம் பாடிக் குளிர்சுரத்தைப் போக்கியருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் அத்தலத்தில் விரும்பி யெழுந்தருளியிருந்துப் பின் சில நாட்களில் அங்கு

நின்றும் நீங்கிச் சென்று, சிவபிரானுரது உறைவிடங்கள் பலவற்றையுந் தொழுது, சொல்லுதற்கரிய சிறப்புடைய திருப்பாண்டிக்கொடுமுடியைச் சென்றணைந்தனர். பருவ மருப் பொன்னிப் பாண்டிக்கொடுமுடியார்தம் திருவடிகளைப் பொருந்தி வணங்கி ஆர்வமுடன் சாத்திய வளத் தமிழ்மாலை இதுவாகும்.

**பண் : காந்தாரம்]** திருச்சிற்றம்பலம் **[2-ம் திருமுறை**

**பெண்ணமர் மேனியி னுரும் பிறைபுல்கு செஞ்சடை யாருங்**
**கண்ணமர் நெற்றியி னுரும் காதம ருங்குழை யாரும்**
**எண்ணம ருங்குணத் தாரும் இமையவ ரேத்தநின் ருரும்**
**பண்ணமர் பாடலி னுரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 1**

**பதிகப் பொழிப்புரை :** *1.* உமாதேவியார் ஒரு பாகத்தில் பொருந்தியிருக்கும் திருமேனியையுடையவரும், பிறைச் சந்திரன் பொலியும் சிவந்த சடைமுடியையுடையவரும் நெற்றியில் கண்ணுடையவரும் திருச்செவியில் பொருந்திய குழையையுடையவரும், எண்வகையாகச் சொல்லப்பட்ட குணங்கள் பொருந்தியவரும், தேவர்கள் தொழும்படி நிலைபெற்று நிற்பவரும், பண்களுடன் கூடிய திருப்பாடல்களைத் தனக்கு தோத்திரமாகக் கொண்டவரும், திருப்பாண்டிக் கொடுமுடியில் எழுந்தருளிருக்கும் சிவபெருமானேயாவார்.

**அமர்தல் :** *அடங்குதல், அமைதல், இருத்தல், நெருங்குதல், படிதல், பொருந்தல், பொலிதல், மிகுதி, வாய்த்தல், விரும்புதல் முதலிய பல பொருள் தரும்.*

**பெண்ணமர் மேனியினுர்** - *மாதொருபாகர்;* **பிறை புல்கு செஞ்சடையார்** - *சந்திரசேகரர்;* **கண்ணமர் நெற்றியினுர்** - *கண்ணுதற் கடவுள்;* **எண்ணமருங் குணத்தார்** - *அமரும் எண் குணத்தார் என மாற்றி உரைத்துப் பொருள் கொள்க.*

**எண் குணங்களாவன :** *தன்வயத்தனுதல், துயவுடம்பினனுதல், இயற்கை உணர்வினனுதல், முற்றுமுணர்தல்,*

இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என இவை. இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது. (திருக்குறள், கடவுள் வாழ்த்து 9, பரிமேலழகர் உரை காண்க) இனி, அடியார்களின் எண்ணத்தில் அமரும் குணத்தார் எனப் பொருள் கொள்ளலாகாதோ எனின், அப்பொருள் இரண்டாம் பட்சமாகவே கொள்ளற்குரியது. அஃது எல்லாச் சமயத்தாரும் தங்கள் தங்கள் கடவுளருக்குக் கூறுவது. ஆனால் எண்குணத்தார் என்பது சிவபெருமான் ஒருவருக்கே உரியது ஆதல் காண்க.

**தனைக்கணி மாமலர் கொண்டு தாள்தொழு வாரவர் தங்கள்**
**வினைப்பகை யாயின தீர்க்கும் விண்ணவர் விஞ்சையர் நேஞ்சில்**
**நினைத்தெழு வார்துயர் தீர்ப்பார் நிரைவளை மங்கை நடுங்கப்**
**பனைக்கைப் பகட்டுரி போர்த்தார் பாண்டிக் கொடுமுடி யாரே. 2**

2. தன்னை அழகிய (பெருமையுடைய) கொன்றைமலர் கொண்டு நாள்தோறும் திருவடிகளை வணங்கிப் பூசை செய்வார்களுடைய வினையாகிய பகையையெல்லாம் தீர்த்தருளும் தேவதேவரும், வித்தைகட்கெல்லாம் தலைவரும், தன்னை நினைந்து எழுபவர்களுடைய துயரங்களையெல்லாம் தீர்ப்பவரும், வரிசையாக அமைந்த வளையல்களையணிந்த திருக்கரங்களுடைய உமாதேவியாரும் அஞ்சும்படி யானையை உரித்து அதன் தோலைத் திருமேனிமேல் போர்த்திக் கொண்டவரும், திருப்பாண்டிக்கொடுமுடியில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானேயாவார்.

தனை - தன்னை; கணி - கொன்றை; விஞ்சை - வித்தைகள், அவற்றுக்குத் தலைவர் விஞ்சையர் - அனைத்து வித்தைகளுக்கும் சிவபிரானே தலைவர் என்று வேதமந்திரம் (நாராயண உபநிஷத்) உணர்த்தும். அம்மந்திரமாவது:— **ஈசாநஸ் ஸர்வ வித்யானும் ஈச்வர: ஸர்வபூதாநாம் I ப்ரஹ்மாதிபதிர் ப்ரஹ்மணோதிபதிர் ப்ரஹ்மா சிவோ மே அஸ்து ஸதாசிவோம் II** வித்தைகள் எல்லாவற்றுக்கும் ஈசர் என்பது

''ஈசாந: ஸர்வ வித்யாநாம்'' என்பதாலும், பூதங்கள் எல்லாவற்றுக்கும் பதி என்பது ''ஈச்வர: ஸர்வபூதாநாம்'' என்பதாலும், பிரம்மனுக்குத் தலைவர் என்பது ''ப்ரஹ்மாதி பதி'' என்பதாலும் பிராம்மணர்களுக்குத் தெய்வம் என்பது ''ப்ரஹ்மணோதிபதி'' என்பதாலும் அறியப்படும்.

பனைக்கைப் பகடு—பனை போன்ற நீண்ட துதிக்கையை யுடைய யானை.

சடையமர் கொன்றையி னாருஞ் சாந்தவெண் ணீறணிந் தாரும்
புடையமர் பூதத்தி னாரும் பொறிகிளர் பாம்பசைத் தாரும்
விடையம ருங்கொடி யாரும் வெண்மழு மூவிலைச் சூலப்
படையமர் கொள்கையி னாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 3

3. திருச்சடையில் நெருக்கமாய் அமைந்த கொன்றை மலர்களை உடையவரும், வெண்மையான திருநீற்றைச் சந்தனமாக அணிந்தவரும், தமது இரு புறங்களிலும் சூழ்ந்து நிற்கும் பூதப்படைகளையுடையவரும், புள்ளிகளை யுடைய படம் விளங்குகின்ற பாம்பை இடையில் கட்டிய வரும், இடபக் கொடியை உடையவரும், வெண்மையான மழு, மூவிலைச் சூலம் ஆகிய படைகளை விரும்பும் கொள்கை யினரும் திருப்பாண்டிக்கொடுமுடியில் எழுந்தருளியிருக்கும் சிவபிரானே யாவர்.

பொறி - புள்ளிகள், அவற்றையுடைய படம் என்று கொள்ளப்பட்டது. பாம்புக்குப் படமே சிறந்த உறுப் பாகும்.

வெண்மழு - நன்கு தீட்டப்பட்டு வெள்ளொளி வீசும் மழுப்படை. இப்படை இறைவரது திருக்கரத்தில் இருப் பதே தீயவர்க்கு அச்சத்தை விளைவிப்பதாகலின், ஒருவர் மேல் செலுத்தப்பட்டு அதனால் குருதிக்கறைபடிய வேண்டிய தில்லாது என்றும் வெண்மையாகவே இருக்கும் மழு என்றும் கொள்ளலாம்.

நறைவளர் கொன்றையி ளுரும் ஞாலமெல் லாந்தொழு
தேத்தக்
கறைவளர் மாமிடற் றுரும் காடரங் காக்கன லேந்தி
மறைவளர் பாடலி னேடு மண்முழ வங்குழல் மொந்தை
பறைவளர் பாடலி ளுரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 4

4. தேன் பெருகுதலையுடைய கொன்றைமலர் மாலை யணிந்தவரும், எல்லா உலகத்தினரும் 'நீலகண்டம்' என்று தொழுது ஏத்துமாறு நஞ்சின் கருமை பொலிந்து விளங்கும் அழகிய திருக்கழுத்தையுடையவரும், காட்டையே நடன அரங்கமாகக் கொண்டு திருக்கரத்தில் தீயேந்தி பெருமை வளர்தலையுடைய வேதப் பாடல்களோடு மார்ச்சனையுடைய முழவம், குழல், மொந்தை, பறை போன்ற வாத்தியங்களுடன் கூடிய பாடல்களை (நடனஞ் செய்யும் பொழுது) உடையவரும் திருப்பாண்டிக்கொடுமுடியில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானேயாவார்.

கானகத்தையே ஆடரங்காகக் கொண்டு கனலேந்தி மறைவளர் பாடலோடு பல்லியங்களின் ஒலியும் பாடல்களும் இசைக்கப்பட இறைவர் திருநடனம் செய்கின்றார் என்பது கருத்து.

போகமு மின்ப முமாகிப் போற்றியென் பாரவர் தங்கள்
ஆக முறைவிட மாக அமர்ந்தவர் கொன்றையி னேடும்
நாகமுந் திங்களுஞ் சூடி நன்னுதல் மங்கைதன் மேனிப்
பாக முகந்தவர் தாமும் பாண்டிக் கொடுமுடி யாரே. 5

5. போகம் எனப்படும் சிற்றின்பநுகர்ச்சியும் திருவடிப் பேறு எனப்படும் பேரின்பமுமாகியும், எவர்கள் 'போற்றி' என்று துதிக்கின்றார்களோ அவர்களது தேகத்தையே தமக்கு உறைவிடமாகக் கொண்டு விருப்பத்துடன் எழுந்தருளியிருப்பவரும், திருச்சடையில் கொன்றைமாலையோடு பாம்பு, பிறைச்சந்திரன் ஆகியவைகளையும் தரித்து, அழகிய

நெற்றியையுடைய உமாதேவியார் தமது திருமேனியில் ஒரு பாகமாக இருத்தலை உகந்தவரும் திருப்பாண்டிக்கொடு முடியில் எழுந்தருளியிருக்கும் சிவபிரானுரேயாவர்.

போகம் - இறைவர் உயிர்களுக்கு அருளும் தனு, கரண, புவனத்தோடு நான்காவதான போகமும் அப்போகத்தை அனுபவிப்பதால் உண்டாகும் சிற்றின்பமும் எனக் கொள்க. இது பந்தத்துக்குக் காரணமானது. இன்பம் - சிற்றின்பத்துக்கு மாறுன பேரின்பம். இது திருவடிப்பேற்ருல் விளைவது. இதுவே வீடு எனவும் படும். 'பந்தமும் வீடும் படைப்போன் காண்க' (திருவண்டப்பகுதி - 52), 'பந்தமுமாய் வீடுமாயினுர்க்கு' (திருப்பொற்சுண்ணம் - 20) என்ற திருவாசகப் பகுதிகளும், 'பந்தம் வீடு தரும் பரமன் கழல்' (தடுத்தாட்கொண்ட புராணம் - 154) என்ற பெரிய புராணப்பாடற்பகுதியும் ஈண்டு கருதற்குரியன.

இவ்வாறின்றி, ''போகம் உயிர்களின் செயலாகவும், இன்பம் அச்செயல்களால் வரும் இன்பமாகவும் கொள்ளலாம். இவ்வாறு உரை கூறின் 'பந்தமும் வீடும்' என்ற பொருளும் அவ்வுரையுள் அடங்குகிறது'' என்பது கோவை அறிஞர் திரு. சி. க. கண்ணுயிரம் அவர்கள் உதவிய குறிப்பு. இராணிப்பேட்டை புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனுர் கருத்து; போகமும் இன்பமும் : போகம் - நுகர்ச்சி, அது செயலின் விளைவேயன்றிச் செயலாகாது. போகம் பலவகைத்து இந்திரபோகம், தேவபோகம், கந்தருவபோகம். இத்தகைய போகங்களால் உறுவது ஆனந்தம். ஆனந்தத்தின் வகைகளைத் தைத்திரியம் ஆனந்தவல்லி கூறும். எனவே போகமும் - மானுட, கந்தருவ, பிதிர் முதலாக எண்ணப்படும் போகங்களும் அவற்றின் விளைவாகிய ஆனந்தங்களுமாகி என்க.

ஆகம் உறைவிடமாக - 'உள்ளம் பெருங்கோயில் ஊன் உடம்பு ஆலயம்' (திருமந்திரம் - 1823) என்ற பாடற் பகுதி இங்கு கருதற்குரியது.

கடிபடு கூவிள மத்தங் கமழ்சடை மேலுடை யாரும்
பொடிபட முப்புரஞ் செற்ற பொருசிலை யொன்றுடை யாரும்
வடிவுடை மங்கை தன்னோடு மணம்படு கொள்கையி னாரும்
படிபடு கோலத்தி னாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 6

6. மணம் நிறைந்த வில்வம், ஊமத்தம் ஆகிய மலர் களைத் தமது பரந்த சடையின் மேல் உடையவரும், முப் புரங்களும் நீறாகப் போகும்படி அழித்த போர்வில் ஒன் றுடையவரும், அழகு மிக்க நங்கையாராகிய உமாதேவி யாரைத் திருமணஞ் செய்யும் விருப்பத்துடன் இருந்தவரும் உயிர்களின் பொருட்டாக இந்த உலகத்தில் ஏற்றுக் கொண்ட பல வகையான திருமேனிகளையுடையவரும் திருப் பாண்டிக்கொடுமுடியில் எழுந்தருளிய சிவபிரானேயாவர்.

மணம்படு கொள்கை - தட்சிணாமூர்த்தியாகிக் கொண்ட மௌனம் நீங்கி உமாதேவியாரைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று திருவுள்ளம் பற்றிய நிலையைக் குறித்தது. வடிவுடை மங்கை - தலத்து அம்பிகையின் திரு நாமங்களுள் ஒன்றைக் குறிப்பிட்டதாம்.

படி படு கோலம் - படி - உலகம்; உலகத்தில் இறைவனார் லீலையாகக் கொள்ளும் கோலங்களைக் குறித்து திருவிளை யாடற்புராணம், பெரியபுராணம் பார்க்க. படி என்பு தற்கு 'நிலையான, முறைமையான' முதலிய பொருள்களைக் கொண்டு நிலையான கோலத்தினார், முறைமையான கோலத்தினார் என்று கொள்ளலுமாம். இவ்வாறெல்லாம் இன்றி, ''படிபடு கோலத்தினார்—படியாகப் பொருந்திய கோலம். எல்லா உருவங்களுக்கும் காரண உருவம் இறைவனுடையதே. 'யாதேனும் காரணத்தால் எவ்வுலகில் எத்திறமும் மாதேயும் பாகம் இலச்சினையே ஆதலினால், திருக்களிற்றுப்படியார், 82). காரியமான எல்லாப் படிக் கும் இறைவனது கோலமே காரணப்படியாயிற்று. படி - ஒப்பு, பிரதிச்சந்தம்'' என்பது திருத்தருமையாதீனக்

குறிப்புரை, படிபடுகோலம் - எல்லாவற்றும் படிந்த - தங்கிக் கிடந்த - தன்மை. (சிவக்கவிமணியவர்களின் உரைக் குறிப்பு).

**ஊனமர் வெண்டலே யேந்தி உண்பலிக் கென்றுழல் வாரும்**
**தேனமரும் மொழி மாது சேர்திரு மேனியி னுரும்**
**கானமர் மஞ்ஞைக ளாலுங் காவிரிக் கோலக் கரைமேல்**
**பானல நீறணி வாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 7**

7. ஊன் பொருந்திய பிரமனது வெள்ளிய மண்டை யோட்டில் பிச்சை யெடுத்துத் திரிபவரும், தேனின் இனிமை பொருந்திய மொழிகளேப் பேசும் உமா தேவியார் சேர்ந்து இருக்கும் திருமேனியையுடையவரும், பால் போலும் நன்மைகளேயளிக்கக்கூடிய திருநீற்றை அணிப வரும், காடுகளில் வசித்தலே விரும்பும் மயில்கள் ஆடுகின்ற காவிரி நதியின் அழகிய கரைமேல் உள்ள திருப்பாண்டிக் கொடுமுடி என்னுமித்தலத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானே யாவார்,

பிரமகபாலத்தையேந்தி பலிக்குழன்ற செய்தி கந்த புராணம், தக்ஷகாண்டம், ததீசி உத்தரப் படலத்தில் காண்க. எமது மற்ருெரு வெளியீடான சிவபரத்துவ மாட்சிமை அல்லது தக்ஷகாண்டம் என்ற நூலிலுங் காண்க.

தேன் அமரும் மொழி மாது — தேன் என்பது அதன் இனிமையைக் குறித்து நின்றது. பண்மொழியம்மை என்ற இத்தலத்துத் தேவியின் திருநாமத்தைக் குறித்ததாம்.

பானல நீறு—பால் நல நீறு - பால்போலும் நன்மைகளே யுடைய திருநீறு. பால் உணவாகவும் மருந்தாகவும் உயிருக் கும் உடலுக்கும் நன்மை செய்வது போலத் திருநீறும் உடலுக்கு அழகும் பிணிநீக்கம் போன்ற நன்மையும் செய்வ துடன் வினைகளேப் போக்குவதால் உயிருக்கும் நன்மை செய் கிறது. திருநீற்றுத் திருப்பதிகம் காண்க. பால் இறை வருக்குத் அபிடேகப் பொருளாவது போலத் திருநீறும் அபிடேகப் பொருளாகப் பயன்படுகிறது என்பதும் கொள்க.

புரந்தரன் தன்னொடு வானோர் போற்றியென் றேத்தநின் றாரும்
பெருந்திறல் வாளரக் கன்னைப் பேரிடர் செய்துகந் தாரும்
கருந்திரை மாமிடற் றாருங் காரகில் பன்மணி யுந்திப்
பரந்திழி காவிரிப் பாங்கர்ப் பாண்டிக் கொடுமுடி யாரே. 8

8. இந்திரனோடு மற்றுமுள்ள தேவர்கள் அனைவரும் "போற்றி, போற்றி" என்று ஏத்தும்படி முழுமுதற் கடவுளாக நின்றவரும், பெருத்த வலிமையுடைய வாளேந்திய இராவணனைப் பேரிடருக்குள்ளாக்கி (அதனால்) தாம் உயர்ந்தவரும், கடலினின்றும் தோன்றிய கரிய நஞ்சை அடக்கிய அழகிய திருக்கழுத்தையுடையவரும், கரிய அகிற் கட்டைகள் - பலமணிகள் ஆகியவற்றை அடித்துத் தள்ளி வந்து பரந்து செல்லும் காவிரி நதியின் பக்கமுள்ள திருப் பாண்டிக்கொடு முடியில் எழுந்தருளியிருக்கும் சிவபிரானரே யாவர்.

இராவணன் பேரிடருக்குள்ளாகிய செய்தி அனைவரும் அறிந்ததே. உகந்தார் - பெருந்திறல் உடையவனை இடருக்குள்ளாக்கியதால் உயர்ந்தார். 'உகப்பே உயர்தல்' (தொல்காப்பியம், சொல்லதிகாரம், 305).

கருந்திரை - அலை என்னும் பொருளுடைய திரை அதனையுடைய கடலுக்காகி, கடல் என்பது அதனின்றும் தோன்றிய நஞ்சுக்காகியது இருமடியாகு பெயர்.

பரந்து இழி - அகத்தியரது குண்டிகையினின்றும் வெளியே இழிந்து கீழே பரந்து செல்லும் என்க. (சிவக் கவிமணியவர்களின் உரைக்குறிப்பு).

திருமகள் காதலி னானுந் திகழ்தரு மாமலர் மேலைப்
பெருமக னும்மவர் காணாப் பேரழ லாகிய பெம்மான்
மருமலி மென்மலர்ச் சந்து வந்திழி காவிரி மாடே
பருமணி நீர்த்துறை யாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 9

9. இலக்குமியின் கணவனான திருமாலும் அவரது விளக்கமான உந்தித்தாமரையின் மேல் இருக்கும் பிரம

தேவனும் ஆகிய அவர்கள் இருவரும் அடி முடி தேடிக் காணுதவண்ணம் பேரழற்றூணுகவாகிய பெருமான், மணம் மிக்கவையும் மென்மையானவையுமான மலர்களும் சந்தனக் கட்டைகளும் சேர்ந்து வரும் நீர் பாயும் காவிரி நதியின் பக்கத்தில் பருத்த மணிகள் தங்கும் நீர்த்துறை பொருந்திய திருப்பாண்டிக்கொடுமுடியில் வீற்றிருக்கும் சிவபிரானுரேயாவார்.

திருமகள் காதலினுன்-இத்தலத்தில் திருமகளே மார்பில் கொண்டு பள்ளிகொண்ட அரங்கர் இறைவரது பின் புறம் நினைந்து கிடக்கும் சந்நிதி உள்ள குறிப்பு. மாமலர் மேலேப் பெருமகன் - இத்தலத்தில் வன்னி மரத்தின் கீழ் வழிபட்டு அமரும் பிரமன் சந்நிதி உள்ள குறிப்பு. (திரு. சிவக்கவி மணியவர்கள் குறிப்புரை).

புத்தரும் புந்தியி லாத சமணரும் பொய்ம்மொழி யல்லால்
மெய்த்தவம் பேசிட மாட்டார் வேடம் பலபல வற்றுல்
சித்தருந் தேவருங் கூடிச் செழுமலர் நல்லன கொண்டு
பத்தர்கள் தாம்பணிந் தேத்தும் பாண்டிக் கொடுமுடி யாரே. 10

10. அறிவற்றவர்களான பௌத்தர்களும் சமணர்களும் பொய்யான வார்த்தைகளேப் பேசுவதேயன்றி, மெய்த்தவத்தினர்க்குரிய உண்மைகளேப் பேசமாட்டார்கள். (எனவே) அவர்களது பொய்ம்மொழிகளேப் புறக்கணித்து) பலபல வேடங்களால் விளங்கும் சித்தர்கள், தேவர்கள் மற்றும் பக்தர்களாகிய அவர்களும் செழுமையுடைய நல்ல மலர்களேக் கொண்டுபணிந்து ஏத்தும் திருப்பாண்டிக்கொடுமுடியில் வீற்றிருக்கும் சிவபிரானுரே முழுமுதற் கடவுளாவார். (அவரையே ஏத்தி உய்திபெறுங்கள் என்ற வாறு).

புந்தியில்லாத—இதை புத்தர் சமணர் இருவர்க்கும் கூட்டியுரைக்கப்பட்டது. இவ்வாறின்றி, ''புந்தியில்லாத

சமணர் என்றதனுல் 'புத்தி உள்ள' - புத்திதத்துவமட்டில் அமைதியுள்ள - புத்தர் என்பது குறிப்பு'' என்று உரை கூறியுள்ளார் திரு. சிவக்கவிமணியவர்கள்.

மெய்த்தவம் பேசிட மாட்டார்—அவ்விருவரும் பேசுதல் தவம் போன்றிருப்பினும் அவை மெய்த்தவமல்ல. (இது வும் திரு. சிவக்கவிமணியவர்களின் குறிப்புரை).

வேடம் பலபல—சித்தர்கள், அடியார்கள் அறுவகைச் சமயத்தோராவர். அவ்வச் சமயத்தினர்க்கேற்ற வேடத் துடன் இருப்பர். ''பல வேடச் சைவர்'' (பெரிய புராணம், கண்ணப்ப நாயனுர் புராணம்-1018). காபாலம் மாவிரதம் பாசுபதம் முதலியன. தேவர் முப்பத்துமூன்று வகையினராகலின் அவ்வவ்வகையார்க்குரிய கோலத்துட னிருப்பர் என்பதாம்.

கலமல்கு தண்கடல் சூழ்ந்த காழியுள் ஞானசம் பந்தன்
பலமல்கு வெண்டலை யேந்திப் பாண்டிக் கொடுமுடி தன்னைச்
சொலமல்கு பாடல்கள் பத்துஞ் சொலவல் லார்துயர் தீர்ந்து
நலமல்கு சிந்தைய ராகி நன்னெறி எய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்.

11. மரக்கலங்கள் மலிந்த குளிர்ந்த கடல் சூழ்ந்த சீகாழியில் வாழும் ஞானசம்பந்தன் வெண்தலை ஏந்திய வராகிய சிவபிரானின் பலன்கள் மலிந்த திருப்பாண்டிக் கொடுமுடியைச் சொல்லுந்தோறும் (பயன் அல்லது பெருமை) மலிகின்ற பத்துப் பாடல்களையும் ஓதவல்லவர் கள் துயரம் நீங்கி, நற்குணங்கள் நிறைந்த நெஞ்சினராகி வீடுபேறு தரும் நன்னெறியைச் சேர்வார்கள்.

வெண்டலையேந்தி—ஏந்தி என்பது இங்குப் பெயர்ச் சொல், ஏந்தியவருடைய என்ற பொருளில் ஆறனுருபு தொக்கி வந்தது.

நலமல்கு சிந்தை—நலம் - பேரின்பம் எனக்கொண்டு பேரின்ப நாட்டம் நிறைந்த சிந்தை எனவும் உரைக்கலாம்.

நன்னெறி—நன்மையாகிய வீட்டின்பத்தை நல்கும் சிவ நெறி. ''வீடு காட்டுந் நெறி'' (திருஞானசம்பந்த சுவாமி கள், திருந்துதேவன்குடி, 5)

தலவரலாறு:—திருப்பாண்டிக்கொடுமுடி என்னும் இத் தலம் கொங்கு நாட்டு 6 வது பாடல் பெற்ற தலமாகும். கொடுமுடி என்ற பெயராலேயே தற்காலம் விளக்கமாய் அறியப்படுகிறது. மஹாமேருவின் சிகரங்களுள் ஒன்று என்பது தலவரலாறு. பிரமவிட்டுணுக்கள் வழிபட்டுப் பேறடைந்து தனித்தனியே இவ்வாலயத்துள் கோயில் கொண்டனர். இஃதறியாது பாமரரேயன்றிப் பண்டிதர் களிலும் சிலர் கூட இத்தலத்தைத் திரிமூர்த்தி சந்நிதி என்று தவருக வழங்கலாயினர். இவ்வாறு வழங்குதல் பெரும் பாவம். ''மூவரென் றேயெம் பிரானெடு மெண்ணிவிண் ணுண்டுமண்மேற் றேவரென் றேயிறு மாந்தென்ன பாவந் திரிதவரே'' என்ற திருவாசகக் கருத்தும் காண்க.

இத்தலத்துக் கணிமையில் காகவுருவங் கொண்டு விநாயகர் அகத்தியரது நீர்க்கமண்டலத்தைக் கவிழ்த்து அதனின்றும் காவிரியைப் பெருகச் செய்து சீகாழியில் இந்திரன் அமைத்த நந்தவனத்தைச் செழிக்கச் செய்தனர் என்பது கந்தபுராண வரலாறு. ஒரு பாண்டியனுக்குக் கறை (நோய்) தீர்ந்த காரணத்தால் கறையூர் என்றும் பாண்டிக்கொடுமுடி என்றும் வழங்கப்படுகிறது. சுந்தர மூர்த்தி சுவாமிகள் இங்குப் பாடியருளிய நமச்சிவாயப் பதிகத்தில் கறையூரில்பாண்டிக்கொடுமுடி எனக்குறிப்பிட்டிரு த்தல் காண்க. மூவர் பாடலும் பெற்ற பெருமையுடைய இத்திருப்பதியை மாணிக்கவாசக சுவாமிகள், கபிலதேவ நாயனர், அருணகிரிநாதர் முதலியோரும் பாடியுள்ளனர். கோயமுத்தூர் வித்துவான் கந்தசுவாமி முதலியாராலும் அவரது மாணுக்கர் வேங்கடரமண தாசர் என்பவராலும் இயற்றப்பட்ட தலபுராணமும் உள்ளது.

அகத்திய முனிவருக்குத் திருக்கல்யாணக் காட்சி தந்து ஈசன் கோயில் கொண்ட இத்திருத்தலம் ஈரோடு - திருச்சி இரயில் மார்க்கத்தில் கொடுமுடி என்ற பெயருடன் இரயில் நிலயமாக விளங்குகிறது. இரயில் நிலயத்தினின்று சற்றுத் தொலைவில் காவிரிக் கரையில் கிழக்கு நோக்கி திருக்கோயில் அமைந்துள்ளது. இங்குக் காவிரி வடக்கி லிருந்து தெற்காகப் பாய்ந்து, பின் கிழக்கு நோக்கிச் செல்கிறது.

இறைவர் திருப்பெயர்—கொடுமுடி நாதர், மகுடேசு வரர், கொடுமுடிலிங்கர், கொடுமுடிவரதர் முதலியன. இறைவியார் திருப்பெயர்—பண்மொழியம்மை, வடிவுடை நாயகி, சௌந்தரநாயகி முதலியன.

தீர்த்தம்—காவிரி; தலவிருட்சம்—வன்னி.

சிவம்.



---

## திருஞானசம்பந்த சுவாமிகள் துதி

பொன்பூத்த கிண்கிணிச் செஞ் சீரடியும்
யோகவுடைப் பொலிவும் வேத
மின்பூத்த முந்நூலும் வெண்ணீறும்
திகழ்மார்பும் விரிபொற் றுள
முன்பூத்த திருக்கரமு மிணைவிழியுங்
குறுநகையும் முதல்வன் பால்மெய்
அன்பூற்றுங் கனிவாயும் பெற்றமழ
விளங்களிற்றை யண்மி வாழ்வாம்.

—ஈசானதேசிகர், திருக்கடம்பநாத புராணம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# திருக்கருவூரானிலை

பதிக வரலாறு—திருஞானசம்பந்த சுவாமிகள் திருப் பாண்டிக்கொடுமுடி இறைவரை வணங்கித் தமிழ்மாலை மகிழ்ந்து சாத்திப் பின் திருவெஞ்சமாக்கூடல் முதலாக இறைவரது ஒப்பில்லாத தலங்கள் பலவற்றையும் தரிசித்துத் துதித்துக் கிழக்குத் திசையில் செல்வாராகிச் செல்வத் திருக்கருவூரில் திருஆனிலையென்னும் திருக்கோயில் சென்று அங்குப் பரமனைப் பக்தியுடன் பாடிய நல்லிசை வண்டமிழ்ச் சொற்றொடையாகிய திருப்பதிகம் இதுவாகும்.

பண்—இந்தளம்] திருச்சிற்றம்பலம் [2—ம் திருமுறை

தொண்டெ லாம் மலர் தூவி ஏத்தநஞ்(சு)
உண்ட லாருயி ராய தன்மையர்
கண்ட னூர்கரு வூரு ளானிலை
அண்ட னாரரு ளீயும் அன்பரே. 1

பதிகப்பொழிப்புரை,—*1*. தொண்டர்களெல்லாம் மலர் தூவி வழிபட, நஞ்சுண்டு (அதனால்) ஏனையோர்களுடைய உயிராய தன்மையரும், வீரரும், திருக்கருவூருள் ஆனிலை என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் அண்டனார் ஆவர். இவரே அடியார்களுக்கு அருளை வழங்கும் அன்பராவர்.

மலர் தூவி ஏத்தல்—திருவடிகளில் மலர்களையிட்டு அருச்சித்தல்.

நஞ்சுண்டு அலார் உயிராய தன்மையர்—தாம் நஞ்சை உண்டு அதனால் மற்ற தேவர்கள் இறவாதவண்ணம் அவர்களின் உயிராகிய தன்மையர். அஃதாவது நஞ்சை இறைவர்

உண்டிலரேல், அந்த நஞ்சு ஏனையோர் அனைவருடைய உயிர் களையும் போக்கியிருக்கும். நஞ்சை இறைவனார் உண்டதால் அவர்கள் உயிர் பிழைத்தனர். ஆதலின் இறைவர் அவர் களுக்கு உயிர் ஆனார் என்பதாம்.

கண்டனார்—எசமான், தோழன், நாயகன், வீரன் என்று பல பொருள் உள. நஞ்சையுண்ட செயலைக் கூறி அடுத்து **கண்டனார்** என்றமையால் வீரர் என்று பொருள் கூறப் பட்டது. இவ்வாறின்றி, ''இறைவன் இயல்பில் சொரூபவடி வினன். அஃது அளவுக்கு உட்படாது அகண்டமாய் நிற்கும். எனவே உயிர்கள் தன்னை அறிந்து வணங்க வேண்டும் என்னும் பேரருளால் தடத்தவடிவங்கொண்டு விடுகிறான். அஃது அளவுட்பட்டு அகண்டத்தினின்றும் ஒரு பகுதியாகி நிற்கும். எனவே **கண்டனார்** என்றார்'', எனப்பொருள் உரைப் பார் கோவை அறிஞர் திரு. சி. சு. கண்ணுயிரம் அவர்கள்.

**கண்டு அனார்** எனப்பிரித்து கண்டு போல் இனிப்பவர் என்பது திருத்தருமையாதீனக் குறிப்புரை, **அண்டர்**— தேவர்.

**நீதி யார்நினைந் தாய நான்மறை**
**ஓதி யாரொடுங் கூடலார் குழைக்**
**காதி னார்கரு வூரு ளானிலை**
**ஆதி யாரடி யார்தம் அன்பரே.** 2

2. நீதியே வடிவானவர், தாம் திருவுள்ளங்கொண்ட வண்ணம் நான்கு மறைகளையும் உலகிற்கு அருளியவர், (எங்கும் நிறைந்திருப்பவராயினும்) எப்பொருளுடனும் கூடாது தனித்து இருப்பவர், குழையணிந்த திருச்செவியை யுடையவர், திருக்கருவூருள் ஆனிலைக் கோயிலில் எழுந் தருளிய ஆதியாராகிய இவரே அடியார்களுக்கு அன்பரா யிருப்பவர்.

நீதியார்—''......நீதி பலவும் தன்ன உருவாமென மிகுத்ததவன்.........'' (திருஞானசம்பந்த சுவாமிகள், திரு வைகாவூர் திருப்பதிகம், 4ம் பாடற்பகுதி).

நான்மறை ஓதி—'ஓதி' பெயர்ச்சொல், ஓதியவர். இறைவரது சங்கல்பத்தாலேயே அனைத்து வேதங்களும், ஆகமங்களும் உண்டாயின. (திருவிளையாடற்புராணம், வேதத்துக்குப் பொருளருளிச் செய்த படலங்காண்க.)

யாரொடுங் கூடலார்—இறைவர் வேருய் நிற்கும் நிலை. ஆதியார்—உலகத் தோற்றத்துக்கு ஆதி காரணமாயிருப் பவர்.

விண்ணு லாமதி சூடி வேதமே
பண்ணு ளார்பர மாய பண்பினர்
கண்ணு ளார்கரு வூரு ளானிலை
அண்ண லாரடி யார்க்கு நல்லரே. 3

3. ஆகாயத்தில் உலாவும் மதியை அணிந்தவரும், மேலான இசை நிறைந்த மறைகளின் வடிவமான தன்மை யரும், திருக்கருவூருள் ஆனிலையென்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் தலைவருமாகிய சிவபெருமான் எப் பொழுதும் என் கண்ணைவிட்டகலாதிருப்பவர். இப்பெரு மானே அடியார்க்கு நல்லவர் ஆவார்.

இரண்டாவது அடி, பரமாய பண்ணுளார் வேதமே ஆய பண்பினர்'' எனக் கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது.

இவ்வாறின்றி, ''வேதமே பண்ணுளார்'' என்றே கூட்டி வேதத்தையே குதிரையாக்கி 'அதன் மேலிடும் தவிசிலே அமர்ந்தவர். (பண்-குதிரைக் கல்லணை). இதனுல் மாணிக்க வாசகருக்காகக் குதிரைச் சேவகனுய் வந்ததைக் கூறுகின்ருர் எனக் கொண்டார் இராணிப்பேட்டைப் புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனுர் அவர்கள். (இங்ஙனங் கொண் டால் மாணிக்கவாசக சுவாமிகள் திருஞானசம்பந்த சுவாமி களுக்குக் காலத்தால் முற்பட்டவர் என்பது உறுதியாகிறது. —ஆசிரியர்).

கண்ணுளார்—கண்ணில் நிறைந்து நிற்பவர். "காளத்தி யான் அவன் என் கண்ணுளானே" (அப்பரடிகள் திருத் தாண்டகம் - திருக்காளத்தி). கண்ணுள் என்னும் சொல் கூத்து என்றும் பொருள் தருமாதலின் கண்ணுளார் என்ப தற்குக் கூத்தப்பெருமான் என்றும் பொருள் கொள்ளலாம். அல்லது கருவூரானிலைக் கண் உள்ளார் என்றும் உரைக் கலாம்.

அடியார்க்கு நல்லார்—'சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க் கலால் நலமிலன்' என்ற அப்பரடிகளின் திருவாக்கும் இங்குக் காண்க. அடியார்க்கு நல்லார் என்பது சிவபிரா னின் திருநாமங்களுள் ஒன்றாகவும் கொள்க.

முடியர் மும்மத யானை யீருரி
பொடியர் பூங்கணை வேளைச் செற்றவர்
கடியு ளார்கரு வூரு ளானிலை
அடிகள் யாவையு மாய ஈசரே. 4

4. சடைமுடியையுடையவர், மும்மதம் பொழியும் யானையின் உரித்த தோலைப் போர்த்தியவர், வெண்பொடி அணிந்தவர், மன்மதனை அழித்தவர், காவல் நிறைந்த திருக் கருவூரானிலை அடிகள். இவரே யாவையுமாகிய ஈசராவர்.

ஈருரி—உரித்த தோல்; பூங்கணைவேள்-மன்மதன்; மூன்றாவது அடியில் கடியுளார் கருவூர் என்பது ஆர் கடியுள் கருவூர் என மாற்றிப் பொருள் உரைக்கப்பட்டது. கடி என்பதற்குக் காலம் எனப் பொருள்கொண்டு காலத்தைத் தம்வசம் வைத்திருப்பவர் அல்லது ஞானமாகிய ஒளியை உடையவர் எனவும் உரைக்கலாம். கடி-விளக்கம். (இது இராணிப்பேட்டைப் புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனார் உதவிய குறிப்பு).

யாவையுமாய ஈசர்—'ஒருவனே எல்லாமாகி அல்லனுய் உடனுமாவான்' (சிவஞானசித்தியார்-46). இதே பதிகம் 9ம் திருப்பாடலில் 'முழுதுமாகிய மூர்த்தி' என வருதலுங் காண்க.

பங்க யம்மலர்ப் பாதர் பாதியோர்
மங்கை யர்மணி நீல கண்டர்வான்
கங்கை யர்கரு வூரு ளானிலை
அங்கை யாடர வத்தெம் மண்ணலே. 5

5. தாமரைமலர் போன்ற திருவடிகளையுடையவர், உடலின் ஒரு பாதியில் உமாதேவியாரையுடையவர், அழகிய நீலநிறம் பொருந்திய கழுத்தையுடையவர், ஆகாயத்தினின்றும் இழிந்த கங்கையைச் சடையில் தரித்தவர், இவர் திருக்கருவூர் ஆனிலைக்கண் எழுந்தருளிய சிவபிரானும், அழகிய திருக்கரத்தில் ஆடுகின்ற பாம்பையுடையவருமாகிய எமது தலைவராவார்.

தேவர் திங்களும் பாம்புஞ் சென்னியில்
மேவர் மும்மதி லெய்த வில்லியர்
காவ லர்கரு வூரு ளானிலை
மூவ ராகிய மொய்ம் பரல்லரே. 6

6. தேவரும், சென்னியின் மீது திங்களும் பாம்பும் பொருந்தியிருத்தலை உடையவரும், மூன்று மதில்களையும் ஒரு கணையால் எய்த வில்லையுடையவரும், உயிர்க்கூட்டங்கட்கெல்லாம் காவலாயிருப்பவரும், மும்மூர்த்திகளும் தாமேயாகிய வல்லமையுடையவரும் திருக்கருவூர் ஆனிலையில் உள்ள சிவபெருமானவர்.

காவலர்—இரட்சகர், உலகத்தை இரட்சிப்பவர், காப்பவர்; 'திருக்கருவூர் ஆனிலைக் காவலர்' எனக் கூட்டி திருக்கருவூர் ஆனிலையில் எழுந்தருளியுள்ள உலகத்தைக் காக்கும் மூர்த்தி எனவும் பொருள் உரைக்கலாம்.

மூவராகிய மொய்ம்பர்—பிரமன், திருமால், உருத்திரன் ஆகிய மூவருமாகிப் படைத்தல் காத்தல் அழித்தலாகிய முத்தொழில்களையும் தாமே புரியவல்ல வரம்பில்லாத ஆற்றலையுடையவர் என்பதாம், மொய்ம்பு-வலிமை 'படைத் தளித்தழிப்ப மும்மூர்த்திகளாயினை', (திருஞானசம்பந்த சுவாமிகள், திருவெழுகூற்றிருக்கை).

**பண்ணி னார்படி யேற்றர் நீற்றர்மெய்ப்**
**பெண்ணி னார்பிறை தாங்கு நெற்றியர்**
**கண்ணி னார்கரு வூரு ளானிலை**
**நண்ணி னார்நமை யாளும் நாதரே. 7**

7. பண்களாக இருப்பவரும், நிலைத்த தன்மையை யுடைய இடபத்தை ஊர்தியாகவுடையவரும், திருமேனி யின் ஒருபாகத்தில் அம்பிகையைக் கொண்டவரும், பிறைச் சந்திரனைச் சூடிய தலையையுடையவரும், உலகுக்கெல்லாம் ஒரு கண்ணாகவிருப்பவரும், திருக்கருவூரானிலைக் கோயிலை விரும்பியடைந்தவருமாகிய சிவபிரானே நம்மையெல்லாம் ஆளுந்தலைவராவார்.

படியேற்றர்—'படி-நிலைத்த', 'ஏறு-இடபம்' இறை வருக்கு ஊர்தியாக அமைந்தது அறக்கடவுளாகையாலும், 'அறம்' என்றும் நிலைத்த தன்மைத்தாதலாலும் 'படியேற்றர்' எனக்கூறியருளினார். அறக்கடவுள் இறைவருக்கு இடபவூர்தி யான வரலாறு கந்தபுராணம் ததீசி உத்தரப்படலத்தில் காண்க. எமது மற்றொரு வெளியீடான சிவபரத்துவ மாட்சிமை அல்லது தக்ஷகாண்டம் என்ற நூலிலும் விளக்க மாகக் காணலாம்.

**கடுத்த வாளரக் கன்க யிலையை**
**எடுத்த வன்தலை தோளுந் தாளினால்**
**அடர்த்த வன்கரு வூரு ளானிலை**
**கொடுத்த வன்னருள் கூத்த னல்லனே. 8**

8. திருக்கயிலையைப் பெயர்த்தெடுக்க முயன்றவனும், கோபத்தையுடையவனும், வாளேந்திய அரக்கனுமாகிய இராவணனது தலைகளையும் தோள்களையும் தமது ஒரு பாதத்தினால் நெருக்கி அடர்த்தவரும், பின்னர் அவனுக்கே அருள் கொடுத்தவரும் திருக்கருவூருள் திருஆனிலைக் கோயிலில் எழுந்தருளியுள்ள கூத்தப் பெருமானேயன்றோ ?

அடர்த்தவன்—அருள் கொடுத்தவன் என்பது நிக்கிரஹம் அனுக்கிரஹம் என்ற இரண்டும் செய்யவல்ல முதல்வன் என்ற குறிப்பு.

**உழுது மாநிலத் தேன மாகிமால்**
**தொழுது மாமல ரோனுங் காண்கிலார்**
**கழுதி னுன்கரு வூரு ளானிலை**
**முழுது மாகிய மூர்த்தி பாதமே. 9**

9. பேய்கள் சூழப்பெற்றவனும் திருக்கருவூர் ஆனிலையில் கோயில் கொண்டவனுமாகிய முழுதுமாகிய மூர்த்தியான சிவபிரானது திருவடியைத் (திருமுடியையும்) திருமாலும் பிரமதேவனும் தொழுதிருந்தால் கண்டிருப்பர். மிக எளிய வழியாகிய அதைக்கொண்டு காணமாட்டாதவர்களாய் மாநிலத்து ஏனமாகி உழுதும் (அன்னமாகிப் பறந்தும்) காணமுயன்று காண்கிலராயினர்.

உழுதல்—நிலத்தை அகழ்தல் என்ற பொருளில் வந்தது. ஏனம்—பன்றி, திருமால் எடுத்த வடிவம். கழுதினன்—பேயன். ('பித்தனுமாகப் பின்னும் பேயனும் ஆக......' என்ற பெரிய புராணம், தடுத்தாட்கொண்டபுராணம், 41ம் திருப்பாடல் காண்க.) இறைவனுக்குப் பேயோடாடி என்ற பெயர் உண்மையை நிகண்டுகளிலும் காணலாம்.

இத்திருப்பாடலுக்குச் சில சொற்களை வருவித்துப் பொருள் கூறப்பட்டது. தொழுது காண்கிலர், உழுது

காண்கிலர் என இருவழியும் கூட்டியுரைத்தோம். திருப் பாடலில் திருமுடி கூறப்படாவிடினும் மாமலரோனைக் கூறியதால் திருமுடியும் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

புத்தர் புன்சமண் ஆதர் பொய்யுரைப்
பித்தர் பேசிய பேச்சை விட்டுமெய்ப்
பத்தர் சேர்கரு வூரு ளானிலை
அத்தர் பாதம் அடைந்து வாழ்மினே. 10

*10.* அற்பர்களும், அறிவிலிகளும், பொய்யான வார்த்தைகளையே பேசும் பித்தர்களுமாகிய பௌத்தர்கள் சமணர்கள் ஆகியோர் பேசிய பேச்சுக்களையெல்லாம் கொள் ளாது தள்ளிவிட்டு திருக்கருவூருள் ஆனிலைக் கோயிலில் எழுந்தருளியுள்ள, உண்மை அடியார்கள் தியானிக்கின்ற, இறைவரது திருவடிகளைச் சரணடைந்து நல்வாழ்வு பெறு வீர்களாக.

மெய்ப்பத்தர்—உண்மையான அடியார்கள், அல்லது மெய்ப்பொருளாகிய இறைவனிடம் பக்தி செலுத்துபவர் கள். சேர்தல்-இடைவிடாது தியானித்தல்.

சேர் என்பதைக் கருவூர் ஆனிலைக்குக்கூட்டி மெய்ப் பத்தர்கள் சேர் திருக்கருவூரானிலை என்றும் கொள்ளலாம்.

கந்தமார் பொழில் காழி ஞானசம்
பந்தன் சேர்கரு வூரு ளானிலை
எந்தை யைச்சொன்ன பத்தும் வல்லவர்
சிந்தை யில்துய ராய தீர்வரே. 11

திருச்சிற்றம்பலம்.

*11.* மணம் நிறைந்த பொழில்கள் சூழ்ந்த சீகாழியில் வசிக்கின்ற திருஞானசம்பந்தன் சென்றடைந்த திருக்கருவூர்

ஆனிலே எந்தையாராகிய சிவபிரானைத்துதித்துப் பாடிய இப்பத்துப் பாடல்களையும் ஓதவல்லவர்கள் மனக்கவலைகள் அனைத்தும் நீங்கியவராவார்.

இத்திருப்பாடலிலும் சேர் என்பதற்கு தியானித்தல் என்ற பொருள் கொள்ளலாம். சிந்தையில் துயராய தீர்வரே என்பது, ''தனக்குவமையில்லாதான் தாள் சேர்ந்தார்க்கல் லால், மனக்கவலை மாற்றல் அறிது'' என்ற திருக்குறளின் கருத்தாகும். (திருக்குறள் கடவுள் வாழ்த்து, 7)

நலவரலாறு - திருக்கருவூர் என்னும் இத்தலம் கொங்கு நாட்டுத் தலங்களுள் ஏழாவதாகும். தற்பொழுது கரூர் என வழங்கப்படுகிறது. ஆனிலை என்பது கோயிலின் பெயர். காமதேனு வழிபட்டு வரம்பெற்ற காரணத்தால் இப்பெயர் பெற்றது. திருப்பேரூரில் வழிபட்டு பெருமானின் திருநடனக்காட்சியைக் தரிசித்துப் பின் அவரருள் வழியே சென்று இத்தலத்தை அடைந்து காமதேனு பூசித்ததாகத் தலவரலாறு கூறும். ஆம்பிராவதி என்னும் நதிக்கரையில் உள்ள தலமிது. பல முனிவர்கள் மாமர (ஆம்ர) உருவாகி நின்று இதன் கரையில் தவஞ்செய்த காரணத்தால் இந்த நதி இப்பெயர் பெற்றதென்பர். ஆன்பொருனை என்பது ஆம்பிராவதி என மருவியதாகவும் கூறுவர்.

இத்தலம் சோழ அரசர்கள் முடிசூட்டிக் கொள்ளும் ஐந்து நகரங்களில் ஒன்று. இங்கு எறிபத்தநாயனார் வாழ்ந்து அடியார்களுக்கு இடர்செய்தாரை மழுவினு லெறிந்து சிவபிரானருள் பெற்றார். புகழ்ச்சோழ நாயனார் ஆட்சிசெய்து தொண்டு செய்த தலமும், திருவிசைப்பாபாடி யருளிய கருவூர்த்தேவர் சிவகதியடைந்த தலமும் இதுவே யாகும். கருவூர்த்தேவரது தனி சந்நிதி ஆலயத்தில் தெற்குப் பிராகாரத்தில் உள்ளது. திருஞானசம்பந்தப் பெருமானது பதிகம் ஒன்று மட்டுமே இத்தலத்துக்கு உள்ளது. தலபுராணமும் உள்ளது.

ஈரோடு—திருச்சிராப்பள்ளி இருப்புப் பாதையில் கரூர் இரயில்வே நிலயம் உள்ளது. இரயில் நிலயத்திலிருந்து மேற்கே சுமார் 2 கிலோ மீட்டர் தொலைவில் திருக்கோயில் உள்ளது. பேருந்துகள் மூலமும் இத்தலத்தையடையலாம்.

இறைவர் திருப்பெயர்—பசுபதீசுவரர். கல்வெட்டுக் களில் சுவாமி திருவானிலை ஆளுடையார் என்னும் திருப் பெயரால் கூறப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. இறைவியார் திருப்பெயர்—கிருபாநாயகி. சௌந்தரியவல்லி, கற்பக வல்லி எனத் தேவியர் இருவர் என்று சிவக்கவிமணியவர் களது பெரியபுராண உரை எறிபத்தநாயனர் புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. தீர்த்தம்—ஆம்பிராவதி ஆறு.

## திருக்கருவூர்—மேலும் சில செய்திகள்

**(உதவியவர் - ஆசிரியர் திரு. உ. இரத்தினசபாபதி, கரூர்.)**

இத்தலம் சுக்ரன், முசுகுந்தன், விபாண்டகன் முதலி யோர் வழிபட்டுப் பேறு பெற்றதாகும். சுவாமி சந்நிதி கிழக்குப் பார்த்து உள்ளது. சற்று வடக்கு சாய்ந்துள்ளது. தேவியர் சந்நிதிகள் இரண்டு உள்ளன. ஒன்று தெற்கு பார்த்தது - மற்றொன்று கிழக்கு பார்த்தது. சுவாமி பெயர் ஆனிலையப்பர், கல்யாண பசுபதீசுவரர். தெற்கு நோக்கி இருக்கும் அம்மைக்கு கிருபாநாயகி, ஸௌந்தர்யநாயகி என்றும் கரூர் தலபுராணத்தில் வடிவுடைநாயகி என்றும் உள்ளது. கிழக்குப் பார்த்த அம்மை அலங்காரநாயகி எனப்படுகிறார். ஆம்பிராவதி, தேனுதீர்த்தம், முருகதீர்த் தம், அரசதீர்த்தம், தாடகைதீர்த்தம், பிரமதீர்த்தம் என்பவை தீர்த்தங்கள். இவைகளுள் ஆம்பிராவதி மட்டும் நீர்வற்றியும் சிலகாலம் வற்றாமலும் காணப்படுகிறது. தலப் பெயர்கள் வஞ்சி, ஆதிமாபுரம், வஞ்சுளாரண்யம், கற்பபுரி, கரபுரி, கோபிதாரவனம், பசுபதீசுவரம் பாஸ்கரபுரம், சண்மங்கலபுரம் என்பன,

செவிவழிச்செய்தி—கரூரிலிருந்து ஐந்து கிலோ மீட்டருக்குத் தெற்கில் அப்பிபாளையம் என்று ஓர் ஊர் உள்ளது. அங்கு வேட்டுவ கவுண்டர் குலத்தில் ஓர் அம்மை தோன்றி இறைவனையே அடையும் நோக்கத்துடன் வழிபட்டு வந்தாள். அவ்வம்மையை ஆட்கொள்வான் வேண்டி இறைவர் பங்குனி மாதம் திருக்கல்யாணத்துக்கு முந்தின நாள் வெள்ளையானையை அனுப்பி ஆலயப் பணியாளர்களையும் அனுப்பி வைத்தார். அந்த ஊர் மக்களுக்கு நாம் அந்த அம்மையை அழைத்துக் கொள்ளும்பொழுது ஊர் முழுதும் மலர் மாரி பெய்யும் எனத் தெரிவித்தருளினார். அதன் படியே அனைத்தும் நடந்தன. அந்த அம்மையே தற்காலம் அலங்காரவல்லியாகும். இப்பொழுதும் இதன் நினைவாக பங்குனி மாதம் அத்திருவிழா நடப்பதாகக் கூறுகிறார்கள்.

சிவம்.

---

உ

சிவமயம்

## புகலியர்கோன் புகழ்மாலை

சடையானைச் சடையதுமேற் கொண்டோங்கு சிறுகீற்றுப்
பிறையானைச் சதுர்மறையோ டாறங்கம்
உடையானை அடியர்வினை உடைப்பானை அவர்துயரம்
துடைப்பானைத் தூயதிரு வெண்ணீற்றுப்
படையானை முழுதுலகும் படைப்பானைப் பாநிறத்தோர்
விடையானை வியன்காழி யூர்க்கோயில்
அடைவானை அடையாளங் காட்டாநின் றெமைக்காக்கும்
அருள்மதலைக் காளாய்நான் அமைந்தவாறே.

—தில்லியூர்ச்சிவனடியார்.

சிவம்

---

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

# திருப்பராய்த்துறை

ப தி க வ ர லா று: திருஞானசம்பந்தப் பிள்ளையார் செல்வத் திருக்கருவூர்த்திருஆனிலைக் கோயில் சென்றி றைஞ்சி வண்டமிழ்ச் சொற்றமிழ்பாடி கொங்கு நாட்டி னின்றும் நீங்கி மாணிக்கமலை எனப்படும் திருவாட்போக்கி என்னும் தலத்தை முதலில் வணங்கிப் பின்னர் காவிரியின் தென்கரைத் தலங்கள் பலவற்றையும் பணிவாராய்ப் பல நீண்ட குன்றுகளிலும் பெரிய காடுகளிலும் பலபதிகளிலும் அங்கங்கும் இறைவர் மன்னி எழுந்தருளியிருக்கும் திருக் கோயில்களையெல்லாம் விருப்பத்துடன் சென்று பணிந்து, பின்னர் பொன்போலும் திருச்சடையையுடைய சிவ பிரானது திருப்பராய்த்துறை என்னும் தலத்தினுள் புகுந் தார். அங்கு திருக்கோயிலில் எழுந்தருளிய கண்ணுதற் பெருமானை ஒன்றுபட்ட மனத்துடனே வழிபட்டுக் கவுணியர் குல திலகமாகிய திருஞானசம்பந்த நாயனார் பாடிய கோதில் தமிழ்ச்சொல் மாலை இதுவாகும்.

பண்—மேகராகக்குறிஞ்சி] [1—ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

நீறுசேர்வதொர் மேனியர்நேரிழை
கூறுசேர்வதொர் கோலமாய்ப்
பாறுசேர்தலைக் கையர்பராய்த்துறை
ஆறுசேர்சடை அண்ணலே. 1

பதிகப் பொழிப்புரை:—1. திருநீறு சேர்ந்த ஒரு திருமேனியையுடையவரும், உமாதேவியார் ஒரு கூருகச் சேர்ந்த ஒப்பற்ற திருக்கோலத்தினராய்ப் பருந்துகள் வந்தடைகின்ற தலையைக் கையில் உடையவரும், திருப்பராய்த்துறையில் விளங்கும் கங்கை தங்கிய சடைமுடியையுடைய அண்ணலாகிய சிவபெருமானுவர்.

பாறு—பருந்து; பாறுசேர் தலை—உயிரற்ற தலையைக் கவரவரும் பருந்து கழுகு முதலியவைகளின் செயல் குறிக்கப்பட்டது. இறைவரது திருக்கரத்தில் உள்ள தலையைப் பருந்துகள் கவர்தல் இல்லையாயினும் அவைகளின் இயல்பு பற்றி அங்ஙனம் கூறியருளினர்.

கந்தமாமலர்க் கொன்றைகமழ்சடை
வந்தபூம்புனல் வைத்தவர்
பைந்தண்மாதவி சூழ்ந்தபராய்த்துறை
அந்தமில்ல அடிகளே. 2

2. அழகிய கொன்றை மலரின் மணங்கமழும் சடையில் விண்ணினின்றும் வந்திழிந்த கங்கை நீரைத் தங்க வைத்தவர், பசுமையும் குளிர்ச்சியுமுடைய மாதவிப்பூம் பொழில்கள் சூழ்ந்த திருப்பராய்த்துறையில் எழுந்தருளியுள்ள அந்தமில்லா அடிகளாகிய சிவபெருமானுவர்.

அந்தமில்லா அடிகள்—தாம் எல்லாவற்றுக்கும் அந்தத்தைச் செய்தலேயன்றித் தமக்கு அந்தம் என்பது இல்லாது என்றும் நிலையாக இருப்பவர்.

வேதர்வேதமெல் லாம்முறையால்விரித்(து)
ஓதநின்ற வொருவனுர்
பாதிபெண்ணுரு ஆவர்பராய்த்துறை
ஆதியாய அடிகளே. 3

3. வேதங்களின் வடிவானவரும், வேதங்கள் எல்லாம் முறைப்படித் தம்பெருமைகளை விரித்து ஓதும்படி அவற்றின் உட்பொருளாக நின்ற ஒப்பற்ற பெருமானும், பாதி பெண்ணுருவானவரும் திருப்பராய்த்துறையில் கோயில் கொண்ட ஆதியாகிய சிவபிரானுவர்-

வேதர்— வேதங்களை அருளிச் செய்தவர் என்றும் கொள்ளலாம். வேதமெல்லாம் முறையால் விரித்தோத நின்ற என்பது 'இன்ன வேதத்தின் பின் இன்னது என்ற முறைப்படி விரித்து' எனப் பொருள் உரைத்தார் திருத்தருமை ஆதீனக் குறிப்புரையாசிரியர்.

ஒருவனுர்—தனிமுதல்வர்; வேதமெல்லாம் முறையால் விரித்து ஓத நின்ற—வேதங்களைச் சொன்ன; வேதங்களாற் சொல்லப்பட்ட; ''தனிமுதலாம் பரனென்று பன்முறையாற் றுணிந்த மறைமொழி''—கண்ணப்ப நாயனுர் புராணம், 140ம் திருப்பாடல். (சிவக்கவிமணியவர்களின் உரைக் குறிப்பு).

ஆதியாய அடிகள்—முன்பாடலில் இறைவர் அந்தமில்லாதவர் என்று கூறப்பட்டமையால் அவரே அனைத்துக்கும் அந்தத்தைச் செய்பவர் என்பது பெறப்பட்டது. இத்திருப்பாடல் அந்தத்தைச் செய்யும் அவரே ஆதியாவார் என்பதைப் புலப்படுத்துதல் கண்டு கொள்க. ''அந்தம் ஆதி என்மனுர் புலவர்'' (சிவஞான போதம், 1வது சூத்திரம்).

> தோலுந்தம்மரை யாடைசுடர்விடு
> நூலுந்தாமணி மார்பினர்
> பாலும்நெய்பயின் றுடுபராய்த்துறை
> ஆலநீழல் அடிகளே. 4

4. தோலைத்தமது அரையில் ஆடையாகக்கொண்டு ஒளிவிடும் பூணுலைத் தமது மார்பில் அணிந்தவரும், பால்

நெய் இவற்ருல் அபிடேகங் கொள்ளுபவரும் திருப்பராய்த் துறையில் கோயில்கொண்ட ஆலமர்கடவுளாகிய சிவ பிராஞவர்.

ஆலநீழலடிகள்—இறைவரது தட்சிணுமூர்த்தி திருக் கோலத்தைக் குறித்தது.

விரவிநீறுமெய் பூசுவர்மேனிமேல்
இரவில்நின்றெரி யாடுவர்
பரவிஞரவர் வேதம்பராய்த்துறை
அரவமார்த்த அடிகளே. 5

5. தமது திருமேனியின் மேல் மெய்ப்பொருளாகிய திருநீற்றை விரவிப்பூசுவர், இரவினில் தீயேந்தி நடன மாடுவர், எல்லா வேதங்களாலும் பரவப்பட்டவர், (இவர் யாரெனில்) திருப்பராய்த்துறையில் எழுந்தருளிய அரவ மார்த்த அடிகளாகிய சிவபிராஞவர்.

நீறுமெய் என்பதை மெய்நீறு என மாற்றிப் பொரு ளுரைக்கப்பட்டது. மெய்ப் பொருளாகிய நீறு, அஃதாவது என்றும் அழியாது நிலைத்திருக்கும் நீறு என்பதாம். ''உண்மையில் உள்ளது நீறு சத்தியமாவது நீறு'' போன்ற திருநீற்றுத் திருப்பதிகப் பகுதிகளைக் காண்க. (திருஞான சம்பந்த சுவாமிகள், திருஆலவாய்).

மறையும்ஓதுவர் மான்மறிக்கையினர்
கறைகொள்கண்ட முடையவர்
பறையுஞ்சங்கும் ஒலிசெய்பராய்த்துறை
அறையநின்ற அடிகளே. 6

6. வேதங்களையும் அருளிச்செய்தவர், மான்குட்டி யைத் தமது திருக்கரத்தில் ஏந்தியவர், விடத்தின் கறை பொருந்திய திருக்கழுத்தையுடையவர், பறை - சங்கு முதலிய வாத்தியங்கள் முழங்கும் திருப்பராய்த்துறையில் அனைவரும் துதிக்க நின்ற அடிகளாகிய சிவபிராஞவர்.

**வேதங்களையும்**—இதில் உள்ள உம்மை இறந்தது தழுவிய எச்ச 'உம்'மையாகும். ஆகமங்களை அருளிச்செய்ததேயன்றி வேதங்களையும் அருளியவர் என்பதாம்.

**விடையுமேறுவர் வெண்பொடிபூசுவர்**
**சடையிற்கங்கை தரித்தவர்**
**படைகொள்வெண்மழு வாளர்பராய்த்துறை**
**அடையநின்ற அடிகளே. 7**

7. விடையின் மேலும் ஏறுவர், வெண்மையான திருநீற்றினைப் பூசுவர், தமது திருச்சடையில் கங்கையைத் தரித்தவர், படையாகக் கொண்ட வெண்மையான மழுவையுடையவர், (இவர்) திருப்பராய்த்துறையை அடைந்து கோயில் கொண்ட அடிகளாகிய சிவபிரானுவர்.

**விடையும்**—உயர்வு சிறப்பு உம்மை. ஒரொரு சமயம் தேர், மேகம், குதிரை முதலியனவையும் ஊர்ந்தவர். ஆயினும் விடை அறக்கடவுளாதல் பற்றியும் நிலைத்த ஊர்தியாதல் பற்றியும் சிறப்பாக உயர்வு சிறப்பு கொடுத்துக் கூறப்பட்டது.

**தருக்கின்மிக்க தசக்கிரிவன்றனை**
**நெருக்கினுர்விர லொன்றினுல்**
**பருக்கினுரவர் போலும்பராய்த்துறை**
**அரக்கன்றன்னை அடிகளே. 8**

8. தருக்கு மிகுந்த பத்துத் தலையோனுகிய இராவணனைத் தமது கால் விரலொன்றினுல் நெருக்கினுர். அங்ஙனம் நெருக்கிய அவரே பின் அந்த அரக்கனுக்கு (வாளோடு நாளுமாகிய அருள் கொடுத்து) இன்பம் நுகரச் செய்தார். (அத்தகையவர் யாரெனில்) திருப்பராய்த்துறையில் எழுந்தருளிய அடிகளாகிய சிவபிரானுவர்.

பருக்கினுர் — பருகச்செய்தார், வாளொடு நாள் கொடுத்து இன்பம் பருகச் (நுகரச்) செய்தார். நெருக்கியது மறக்கருணை; பருக்கியது அறக்கருணை. கருணைக்குத் தகுதியில்லாத வன்கண்மையுடையவனையும் என்று குறித்தற்கு ''அரக்கனையும்'' என்ருர் (கோவை திரு. சி. சு. கண்ணுயிரம் அவர்கள் உதவிய குறிப்புரை). இரக்கம் என்றெரு பொருள் இல்லாதவன் அரக்கன்.

நாற்றமாமல ராெனெடுமாலுமாய்த்
தோற்றமும் மறியாதவர்
பாற்றினுர்வினை யானபராய்த்துறை
ஆற்றல்மிக்க அடிகளே. 9

9. மணமுடைய அழகிய தாமரை மலரானுகிய பிரம தேவனெடு திருமாலுமாகிய இருவரும் இறைவரது திருமுடியையேயன்றி திருவடியையும் கண்டறியாதவர்களாயினர். (அவர்களே பின்னர் தொழுது வணங்கிய பொழுது) அவர்களுடைய தீவினைகளைச் சிதறவடித்து அவர்களுக்கு அருள் புரிந்தார். அவர் திருப்பராய்த்துறையில் கோயில் கொண்ட ஆற்றல் மிக்க அடிகளாகிய சிவபிரானுவர்.

தோற்றமும் என்றதால் திருவடியும், அதேயன்றித் திருமுடியும் கொள்ளப்பட்டது. ஆற்றல் மிக்க - இறைவரது பேராற்றல், அளவிலாற்றலுடைமை இறைவரது எண் குணங்களிலொன்று.

திருவிலிச்சில தேரமண்ஆதர்கள்
உருவிலாவுரை கொள்ளேலும்
பருவிலாலெயில் எய்துபராய்த்துறை
மருவினுன்றனை வாழ்த்துமே. 10

10. முத்தி என்னும் திரு இல்லாதவர்களாகிய தேரர் அமணர் ஆகிய அறிவிலிகளுடைய சில உருவிலா உரைகளைக்

கொள்ளாதீர்கள். பெரியவில்லால் மும்மதில்களை எரித்த வரும் திருப்பராய்த்துறையைப் பொருந்தி எழுந்தருளியிருப் பவருமான சிவபிரானைத் துதித்து வணங்குவீராக.

திரு—முத்தித்திரு. இதற்குச் சிவஞானம் என்று பொரு ளுரைத்தார் திருத்தருமையாதீனக் குறிப்புரையாசிரியர்.

சில உருவிலா உரை எனக்கூட்டி உரைக்கப்பட்டது. வேத உரைகளும் கடவுள் உண்மைபற்றிய உரைகளும் எண்ணற்றவை. நாத்திகஉரைகள் மிகச் சிலவே. உருவிலா - உருப்படியாகாத (சிவக்கவிமணியவர்கள் உரைக்குறிப்பு) 'நற்பயன்தராத' என்பது கருத்து.

தேர் அமண் ஆதர்கள்—தேரர்களும் அமணர்களுமாகிய அறிவிலிகள். பௌத்தர்களைக் குறிக்கும் தேரர் என்னும் சொல் தேர் என வந்தது இடைக்குறை. பிள்ளையாரின் திரு முதுகுன்றத் திருப்பதிகத்தில் (3-ம் திருமுறை, சாதாரி, திரு முக்கால்) 10ம் திருப்பாடலில் ''கட்டமண் தேரைக் காய்ந் தீரே'' என வந்ததும் திருவின்னம்பர் திருப்பதிகத்தில் 10ம் திருப்பாடலில் ''தேரமண் சிதைவு செய்தீரே'' என வந்ததுவுங் காண்க.

உருவிலா உரை—பௌத்தர்கள், சமணர்கள் ஆகியோ ரது உரை அறைகுறை அறிவால் கூறப்பட்டவையாம். ஆகவே முழுமை பெறுதவை, அற்பமானவை என்க. கொள்ளேலும்—ஏற்றுக் கொள்ளாதீர். இதில் உள்ள உம்மை அசைநிலையாகக் கொள்க.

செல்வமல்கிய செல்வர்பராய்த்துறைச்
செல்வர்மேற்சிதை யாதன
செல்வன்ஞானசம் பந்தனசெந்தமிழ்
செல்வமாமிவை செப்பவே. 11

திருச்சிற்றம்பலம்.

11. அருட்செல்வம் பொருட்செல்வம் என்ற இருவகையான செல்வம் நிறைந்ததும் அத்தகைய செல்வர்கள் வாழ்கின்றதுமான திருப்பராய்த்துறையில் எழுந்தருளிய செல்வராகிய சிவபிரான் மேல் திருவருட்செல்வனுன திருஞானசம்பந்தன் பாடிய என்றும் அழிவற்ற செந்தமிழ்ப் பாடல்களாகிய இவற்றைப் பாடுவோருக்கு முத்தித்திரு வந்து எய்தும். (பாடுவோர் முத்திபெறுவர் என்பது கருத்து.)

**பராய்த்துறை செல்வர்**—''ஸர்வைச்வர்ய ஸம்பன்னன்'' என உபநிடதங் கூறுவது இங்கு நினேவு கூர்க. எல்லா வகையாலும் இறைவரே முழுமையான செல்வராவர். இத்தலத்து இறைவருக்குச் செல்வர் என்ருெரு பெயரும் உள்ளதாகத் தெரிகிறது.

இரண்டாவது அடியில் உள்ள சிதையாதன என்பதை மூன்ருமடியில் உள்ள செந்தமிழ் என்பதுடன் கூட்டிச் சிதையாதன செந்தமிழ் எனக்கொண்டு பொருள் கொள்ளப்பட்டது. சிதையாதன செந்தமிழ் பாடச் செல்வம் (அருட்செல்வம் பொருட் செல்வம் இரண்டும்) தானே வந்து அடையும் என்பதாம்.

**தலவரலாறு**—காவிரித் தென்கரைத் தலங்களில் இது 3வது தலமாகும். பராய் என்னும் ஒருவகை மரம் தலமரமாதலின் திருப்பராய்த்துறை எனப் பெயர் பெற்றது. அகண்ட காவிரித்துறையில் உள்ளது. இதனே அப்பர் சுவாமிகள் 'பரக்கு நீர்ப் பொன்னிப் பராய்த்துறை' எனப் பாடியுள்ளார்கள். இந்திரன், ஸப்தரிஷிகள், குபேரன் ஆகியோர் பூசித்த திருத்தலம். திருஞானசம்பந்த சுவாமிகள் ஒரு பதிகமும், அப்பர் சுவாமிகள் ஒரு பதிகமும் இத்தலத்தில் பாடியுள்ளனர்.

ஈரோடு—திருச்சி இரயில் பாதையில் எலமனூர் என்ற புகைவண்டி நிலயத்தினின்றும் வடமேற்கே சுமார் 2 கிலோ

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருக்கற்குடி

(உய்யக்கொண்டான்மலை)

பதிக வரலாறு;—திருப்பராய்த்துறையில் கண்ணுதற் பெருங்கடவுளை வணங்கிக் கோதில் தமிழ்ச் சொல்மாலை பாடிய கவுணியர் பெருமான், அங்கிருந்து திருஆலந்துறை திருச்செந்துறையே முதலாகப் பல கோயில்கள் சென்று வணங்கிச் செழுமையான மலர்ச்சோலைகள் சூழ்ந்த திருக் கற்குடி மலை வந்து சேர்ந்தார். திருக்கற்குடி மாமலைமேல் எழுந்தருளியிருந்த கனகக்கொழுந்தாய சிவபிரானைப் போற்றியிசைத்த நற்றமிழ் மாலை இதுவாகும்,

பண்-தக்கராகம்] திருச்சிற்றம்பலம் [1-ம் திருமுறை

**வடந்திகழ் மென்முலை யாளைப் பாகம தாக மதித்துத்**
**தடந்திரை சேர்புனல் மாதைத் தாழ்சடை வைத்த சதுரர்**
**இடந்திகழ் முப்புரி நூலர் துன்பமொ டின்பம தெல்லாம்**
**கடந்தவர் காதலில் வாழுங் கற்குடி மாமலை யாரே. 1**

---

(32ம் பக்கத் தொடர்ச்சி)

மீட்டர் தொலைவில் இத்தலம் உள்ளது. இப்பொழுது திருப்பராய்த்துறை இரயில் நிலயமே உள்ளது என்று அறி கிறோம்.

இறைவர் திருப்பெயர்—பராய்த்துறைநாதர், செல்வர்; இறைவியார் திருப்பெயர்—பொன்மயிலம்மையார்; தீர்த்தம்-அகண்ட காவிரி; தலவிருட்சம்—பராய்.

சிவம்

பதிகப்பொழிப்புரை:—1. முத்துமாலை திகழும் மென்மையான திருமுலையாளாகிய உமாதேவியாரை ஒருபாகமாக வைத்து, பரந்த அலைகள் சேர்கின்ற கங்கையாகிய பெண்ணைத் தம் தாழ்சடையில் வைத்த சதுரரும், மார்பினிடத்து விளங்கும் முப்புரிநூலாகிய பூணூலையணிந்தவரும், துன்பத்தோடு இன்பமாகியவற்றையும் கடந்தவரும் (யாவரெனில்) திருக்கற்குடிமாமலையில் பெருத்த அன்போடு வாழும் சிவபிரானுரேயாவர்.

சதுரர்—சதுரப்பாடு (சாமர்த்தியம்) உடையவர். இங்கு, உமாதேவியார் இடது பாகத்திலிருக்க மற்றொரு பெண்ணைத் தலையிலே வைத்ததையே சதுரப்பாடு எனக் கூறினார். அல்லது விண்ணுக்கடங்காமல் வெற்புக்கடங்காமல் மண்ணுக்கடங்காமல் பேராரவாரத்துடன் விண்ணினின்றும் இறங்கிய கங்கையை இறைவர் தம் சடாமகுடத்தில் ஒரு பக்கத்தில் அடக்கி வைத்த செயலையே 'சதுரப்பாடு' எனக் கூறியருளியதாகவும் கொள்ளலாம்.

துன்பமொடின்பமதெல்லாங் கடந்தவர் — வினையின் நீங்கிய முதல்வனுதலின் வினைபற்றி நிகழ்வனவாகிய இன்ப துன்பங்கள் அவரைப் பாதியா என்பது விளக்கக் கடந்தவர் என்றார். (திருத்தருமையாதீனக் குறிப்புரை).

அங்கமொ ராறுடை வேள்வி யான அருமறை நான்கும்
பங்கமில் பாடலோ டாடல் பாணி பயின்ற படிறர்
சங்கம தார்குற மாதர் தங்கையில் மைந்தர்கள் தாவிக்
கங்குலின் மாமதி பற்றுங் கற்குடி மாமலை யாரே. 2

2. ஆறு அங்கங்களை உடையவையும் வேள்விகளுக்குரிய விதிகளை விளக்குவனவையுமாகிய வேதங்கள் நான்கையும் மற்றும் பாடலோடு ஆடல் - தாளம் ஆகியவற்றையும் பயின்ற படிறர் (யாவரெனில்) குறமாதர்களுடைய சங்கு

வளையல்களையணிந்த கைகளில் உள்ள பிள்ளைகள் தாவி இரவில் அழகிய சந்திரனைப் பிடிக்கும் திருக்கற்குடிமாமலை யில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானேயாவர்.

வேதம் (ஆகமம் உள்பட) வேதாங்கம், உபலட்சணத் தால் வேதாந்தம் மற்றும் ஆடல் பாடல் தாளம் முதலிய அனைத்து வித்தைகளுக்கும் சிவபிரானே தலைவர் என்பது முதல் இரண்டடிகளில் போந்த பொருளாகும். ''ஈசாந: ஸர்வ வித்யானும்'' என்பது சுருதி. விளக்கம் பக்கம் 3ல் காண்க.

படிறர்—பொய்யர். ஒளிக்கும் சோரனுதலின் படிறர் என்றார். திருவாசகம் திருவண்டப்பகுதி ''திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்'' என்பது முதல் ''ஒளிக்கும் சோரனைக் கண்டனம்'' என்பது வரையில் உள்ளவற்றைக் காண்க. திருவிளையாடற்புராணம், நான்மாடக்கூடலான படலம் முதற்பாடலில் ''வேதங்கிடந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப'' என வருதலும், அதே புராணம் மண்சுமந்த படலம் 51வது பாடலில் ''உள்ளொடு புறங்கீழ் மேலாய் உயிர்தொறும் ஒளித்து நின்ற கள்வனை...'' என வருதலுங் காண்க. அப்பரடிகளும் இறைவரை ''ஊனினுள் உயிரை வாட்டி உணர்வினார்க் கெளியராகி, வானினுள் வானவர்க் கும் அறியலாகாத வஞ்சகர்'' எனக் குறிப்பிட்டுள்ளதையும் இங்குக் கருதுக. அப்பரடிகள், திருச்செம்பொன்பள்ளி, திருநேரிசை, 1ம் பாடல்)

இத்திருப்பாடலின் பின்னிரண்டடிகள் திருக்கற்குடி மலையின் உயரத்தையும், குறப்பெண்களின் கைகளில் உள்ள இளம் சிறுவர்களின் சந்திரனைத் தாவிப் பிடிக்க முயற்சிக்கும் குழந்தையுள்ளத்தையும் காட்டுகின்றன.

நீரக லந்தரு சென்னி நீடிய மத்தமும் வைத்துத்
தாரகை யின்னொளி சூழ்ந்த தண்மதி சூடிய சைவர்
போரக லந்தரு வேடர் புனத்திடை யிட்ட விறகில்
காரகி லின்புகை விம்முங் கற்குடி மாமலை யாரே. 3

3. பரந்து வந்த கங்காநதியுடன் கூடிய சென்னியில் செழிப்புடைய ஊமத்தைமலரை வைத்து, நட்சத்திரங்களின் ஒளி சூழ்ந்த குளிர்ச்சியுடைய சந்திரனையும் சூடியருளிய சைவர் (யாவரெனில்) போர்செய்தற்கேற்ற அகன்ற மார்பினையுடைய வேடர்கள் புனத்திடையிட்ட விறகின் தீயால் அகிற்கட்டைகளின் மணம் மிகுதியாகப் பரவும் திருக்கற்குடிமாமலையில் எழுந்தருளியிருக்கும் சிவபரானேயாவர். [விறகுகளோடு அகிற்கட்டைகளும் தீயில் இடப்படுகின்றன என்பதாம்].

தாரகை—நக்ஷத்திரம், இறைவரின் திருமுடியில் உள்ள சந்திரனைத் தாரகைகள் சூழ்தல் இல்லையாயினும், சந்திரன் என்ற பொதுமை பற்றி இங்ஙனம் கூறினர் என்க.

சைவர்—சைவநெறியின் தலைவர், சிவபெருமான். இவர் ஒருவரே ஏனைய சமயங்களின் கடவுளும் ஆவர் என்னும் முழுமுதன்மை குறித்தவாறு. ''தென்னாடுடைய சிவனே போற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி'' (திருவாசகம், போற்றித் திருவகவல்-164,165). 'யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வமாகியாங்கே, மாதொரு பாகனார்தாம் வருவர்' (சிவஞான சித்தியார், சூ. 2-25) அதனால்தான் கண்ணுதல், கறைமிடற்றண்ணல், பிறைசூடி என்ற பிறசொற்களால் கூறாது 'சிவம்' என்று குறிக்கச் 'சைவர்' என்றார். (கோவை அறிஞர் திரு. சி. சு. கண்ணயிரம் அவர்கள் உதவிய குறிப்பு).

ஒருங்களி நியிறை வாவென் றும்பர்கள் ஓல மிடக்கண்(டு)
இருங்கள மார விடத்தை இன்னமு துண்ணிய ஈசர்
மருங்களி யார்பிடி வாயில் வாழ்வெதி ரின்முளை வாரிக்
கருங்களி யானை கொடுக்குங் கற்குடி மாமலை யாரே. 4

4. ''இறைவா ! நீ ஒருங்கு அளி', என்று தேவர்கள் ஓலமிடக்கண்டு தமது பெரிய கழுத்து நிறையும்படி

விஷத்தை இனிய அமுதம் போன்று உண்ட ஈசர் (யாவ ரெனில்) பக்கத்தில் வாழும் அன்பு செறிந்த பெண் யானை யின் வாயில், கரியதும் மதக்களிப்புடையதுமான ஆண் யானை மூங்கிலின் முளைகளை வாரிக்கொடுக்கும் திருக்கற்குடி மாமலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானேயாவர்.

ஒருங்களி நீ இறைவா – இறைவரே ! நீ எங்களையெல் லாம் அழியாதவாறு ஒருசேரக் காத்தருள்வாய் என்பதாம். இது பிரமன் திருமால் உள்ளிட்ட அனைத்து தேவர்களும் இட்ட ஓலம் ஆகும். இங்ஙனம் உம்பர்கள் ஓலமிடக் கண்ட இறைவர், தேவர்களைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் அஞ்சி ஓடிவரும்படிச் செய்த அக்கொடிய நஞ்சினை, இனிய அமுதம் உண்ணுவது போல உண்டருளி தமது வரம்பி லாற்றலுடைமையும், அருளுடைமையையும் காட்டியருளி னர் என்பது முதலிரண்டடிகளின் திரண்ட பொருளாகும். இங்ஙனம் தேவர்கள் அஞ்சி ஓடிவந்து அலறினார்கள் என்ற செய்தியைப் பிள்ளையார் வேறு சில பதிகங்களிலும் குறிப் பிட்டுள்ளார். ('பாரிடம் விண்ணும் மண்ணும்' எனத் தொடங்கும் திருப்பிரமபுரம் 4 வது திருப்பாடல், 'பரிய மாசுணம்' எனத் தொடங்கும் திருவரசிலி 6 வது திருப் பாடல் முதலியன காண்க).

மற்றும் மச்சபுராணம், கந்தபுராணம் தக்ஷகாண்டம் முதலியவற்றிலும் கூறப்பட்டுள்ளதைக் கீழே காண்க. ''ஆகாய நிறத்தினையுடையதாய், எவருஞ் சகிக்கக் கூடாத தாய்த் திக்குக்களெல்லாம் நிறைந்த நஞ்சைத் தேவர்கள் கண்டு பயந்து மூர்ச்சையாகிப் பிரம விஷ்ணுக்களை முன்னிட் டுக்கொண்டு கைலாசத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபிரானை அடைந்து ''விரூபாக்ஷரே, திவ்ய நேத்திரமுடையவரே, நமஸ்காரம்'' என்றற்றொடக்கத்தனவாகத் துதிக்க, சிவ பெருமான் மகிழ்ந்து உங்களுக்கு வேண்டியதை விரைந்து கூறுதிர்; கொடுக்கின்றேம் என, அதற்கு அவர்கள் மஹா தேவரே ! சமுத்திர மதனஞ்செய்தபோது உலகத்தை

அழிக்க வன்மைபூண்ட விஷமானது கிளர்ந்து விட்டது. நாராயணர் அதனால் கிருஷ்ணர் (கரியர்) ஆயினார். இயமன் விஷம் தாக்கி மூர்ச்சையானான். வேறுபலர் விழுந்து போயினர்; வேறு பலர் இறந்து போயினர். விரூபாக்ஷரே! விஷக் கொடுமையினின்றும் எங்களைக் காத்து அதனைப் பக்ஷியும் என, அவர் காளகூட மஹாவிஷத்தை உண்கின்றோம் என்று உரைத்தருளி அதனைக் குடிக்குங்கால், தேவர்கள் சுவாமீ! சுத்தஸ்படிக ஒளியினதாய கண்டத்திலே கோரவிஷத்தை உமக்கு அற்புத அலங்காரமாமாறு சுவதந்திர சக்தியினால் தடுத்து நிற்கச் செய்யும் என அதற்குச் சிவபெருமான் அங்ஙனமே ஆகுக என்று லீலையினால் கண்டத்திலே அதனை நிறுத்திக்கொண்டார்; அப்பொழுது தேவர்கள் சந்தோஷ முடையவராய்த் தேவேசரே! நீலகண்டரே! சம்புவே! என்று ஆனந்தமுடையவர்களாய்த் துதித்தார்கள் என்று மற்ச புராணமும் தக்ஷகாண்டமும் கூறுகின்றன. (ஸ்ரீ காசிவாசி—செந்திநாதய்யர் இயற்றிய தேவாரம் வேத சாரம், பக்கம் 239-240) மஹாபாரதத்திலும், பிரமதேவனின் பிரார்த்தனைக்கிணங்கி சிவபிரான் நஞ்சை எடுத்துக் கண்டத்திலே தரித்தார் என்றும், அன்று முதல் சிவ பெருமான் நீலகண்டர் எனப்படுகின்றார் என்றது சுருதி எனக் கூறப்பட்டுள்ளது.

திருமாலின் பெருமை கூறவந்த மற்றொரு இதிகாசமாகிய இராமாயணமும் திருமால் சிவபெருமானைப் பிரார்த்தித்தார் என்பதைக் கூறும். (வால்மீகி இராமாயணம், பாலகாண்டம், 45-ம் சருக்கம், சுலோகம் 23-24.) சிவபெருமான் நஞ்சுண்ட வரலாற்றின் விரிவையும், தேவர்கள் பிரம்ம விஷ்ணுவை முன்னிட்டுக் கொண்டு இறைவரைச் சரணடைந்து பிரார்த்தித்து நின்ற விரிவையும் கந்தபுராணம் தக்ஷகாண்டம் ததீசி உத்தரப்படலத்திலும், எமது மற்றொரு வெளியீடாகிய சிவபரத்துவ மாட்சிமை அல்லது தக்ஷகாண்டம் என்ற நூலிலும் காணலாம்.

வலிய மதக்களிப்போடு கூடிய ஆண்யானை தானுண்ணுது பெண்யானையின் வாயில் அமுதம் போன்ற மூங்கில் முளைகளை வாரி ஊட்டுகின்ற திருக்கற்குடி மாமலை நாதர் என்பதில், தேவர்கள் வேண்டத்தாம்விடமுண்டு அவர்கட்கு இனிய அமுதமளித்தார் என்ற நயம் காண்க! (இத்திருப் பாடலின் 3, 4வது அடிகளுக்குத் திருத்தருமையாதீனக் குறிப்புரையில் கண்ட பொருள்).

போர்மலி திண்சிலை கொண்டு பூதக ணம்புடை சூழப்
பார்மலி வேடுரு வாகிப் பண்டொரு வர்க்கருள் செய்தார்
ஏர்மலி கேழல் கிளைத்த இன்னொளி மாமணி யெங்கும்
கார்மலி வேடர் குவிக்குங் கற்குடி மாமலை யாரே. 5

5. போர்மலிந்த திண்ணிய சிலையினைக் கையிற் கொண்டு, பூதகணங்கள் புடைசூழப் பூவுலகில் அதிகமாகப் பேசப்படும் வேடுவ வடிவந்தாங்கி, முன்னொரு காலத்தில் அருச்சுனனுக்குப் பாசுபதாஸ்திரம் என்னும் தெய்விகப் படைக்கலத்தை அருள்செய்தவர் (யாவரெனில்) நிலத்தை உழுவதில் சிறந்த பன்றிகள் தோண்டியெடுத்த இனிய ஒளி வீசும் அழகியமணிகளைக் கருமை நிறம் மிகுந்த வேடர்கள் எல்லாவிடங்களிலும் குவிக்கும் திருக்கற்குடிமாமலையில் எழுந்தருளிய சிவபிரானுரேயாவர்.

போர்மலி திண்சிலை—போர்களில் அதிகம் பயன்படும் திண்ணிய வில். இறைவரது வில் பிநாகம் எனப்படும். வில்லேந்தியவருக்கு நமஸ்காரம் என்று சுருதி கோஷிக்கிறது (நமஸ்தே அஸ்து தன்வனே-ஸ்ரீ ருத்ரம்).

பார்மலி வேடுருவாகி— இறைவர் வேட உருவங்கொண்டு வந்து அருச்சுனனுக்கு அருள் புரிந்த செய்தி உலகத்தில் மிகுதியாகப் போற்றப்படுகிறது என்பதாம். பண்டொருவர்- இறைவர் வேடுருவங்கொண்டு அருச்சுனனுக்கு அருள்புரிந்த

வரலாறு பார்மலிந்தவொன்ருகலின், அருச்சுனன் என்று பெயர் கூருது பண்டு ஒருவர் என்று மட்டும கூறினுர். பண்டு இங்குப் பாண்டவர் வாழ்ந்த துவாபரயுகத்தைக் குறிக்கிறது.

ஏர்மலி கேழல்—'ஏர்' என்ற சொல் உழவுத் தொழில் என்ற பொருளேயும் தரும். ஆதலின் பன்றிகளின் இயல் பான நிலத்தைத் தோண்டிச் செல்லுதலேயே ஏர்மலி என்ருர். கேழல்- பன்றி. ஏர் என்ற சொல்லுக்கு அழகு என்ற பொருள் கொண்டு 'இன்னெளி மாமணிக்கு' அடையாகவும் கொள்ள லாம்.

உலந்தவர் என்ப தணிந்தே ஊரிடு பிச்சைய ராகி
விலங்கல்வில் வெங்கன லாலே மூவெயில் வேவ முனிந்தார்
நலந்தரு சிந்தைய ராகி நாமலி மாலேயி ஞலே
கலந்தவர் காதலில் வாழுங் கற்குடி மாமலே யாரே. 6

6. இறந்து போன தேவர்களின் எலும்புகளே மார்பி லணிந்துகொண்டு, ஊராரிடும் பிச்சையை ஏற்பவராகியும் மேருமலேயாகிய வில்லால் (அம்பெய்து) மூன்று மதில்களும் வெங்கனலில் வெந்து நீருகும்படிக் கோபித்தவர் (யாவ ரெனில்) நன்மையுடைய சிந்தையராகி நாவில் மலிந்த தோத்திரங்களின் மாலேயிஞல் மனம் ஒன்றுபட்ட அடிய வர்கள் மிக்க அன்புடன் வாழ்கின்ற திருக்கற்குடிமாமலேயில் எழுந்தருளியிருக்கும் சிவபிரானேயாவர்.

உலந்தவர்—இறந்தவர்; இங்கு பிரம்மன் திருமால் உள்ளிட்ட எல்லாத் தேவர்களேயும் குறித்தது. பிச்சையர்— பிட்சாடனமூர்த்தி. எலும்பணிந்து ஊரிடு பிச்சையை ஏற்ப வராயினும், இவர் முனிந்தால் மும்மதில்களும் வெங்கனலில் வெந்து அழியும் எனக் கூறியருளியது கண்டு கொள்க. மணி வாசகப் பெருமான் ''தாயுமிலி தந்தையிலி தான் தனியஞு யிடினும், காயில் அவன் உலகனேத்தும் கற்பொடி காண்

சாழலோ'' எனப்பாடியருளியதன் நயத்தையும் இங்கு ஒப்பிட்டுக் காண்க. பிச்சையராகியும் என வரவேண்டியதில் உம்மை தொக்கி நின்றதாகக் கொள்க.

நலந்தரு சிந்தையர்—காமம் வெகுளி மயக்கம் முதலிய தீயவையனைத்தும் நீங்கி நன்மைகளே நிறைந்த மனத்தை யுடையவர். நாமலி-நாவில் மலிந்த (நிறைந்த). மாலை-தோத்திரங்களின் வரிசை. கலந்தவர்-ஒருமைப்பட்டவர்கள். மனம் ஒன்றிய முனிபுங்கவர்கள் வாழுங் கற்குடி மலை என்ற தால் யோகியர் இடம் இது என அறிவித்தவாறு.(திருத் தருமையாதீனக் குறிப்புரையில் கண்டது).

நலந்தரு...........கலந்தவர்—மனத்தினுலும் வாக்கினு லும் அன்பு கலந்த பணி செய்யும் அடியார் (சிவக்கவிமணி திரு.சி.கே.சுப்பிரமணிய முதலியார் அவர்கள் பதிகப் பாட்டுக் குறிப்பில் கண்டது). சிந்தை, நா, இவற்றுடன் வாழும் என உடலின் செயலும் கூறித் திரிகரணங்களும் இறைபணியில் ஈடுபடல் கூறினர் (கோவை அறிஞர் திரு.சி. சு.கண்ணுயிரம் அவர்களின் உரைக் குறிப்பு).

**மானிட மார்தரு கையர் மாமழு வாரும் வலத்தார்**
**ஊனிடை யார்தலை யோட்டில் உண்கலனுக வுகந்தார்**
**தேனிடை யார்தரு சந்தின் திண்சிறை யால்தினை வித்திக்**
**கானிடை வேடர் விளைக்குங் கற்குடி மாமலை யாரே. 7**

7. மானேந்திய இடது கரத்தையுடையவர், பெரிய மழுவாயுதம் பொருந்திய வலது கரத்தையுடையவர், இடையே ஊன்பொருந்திய தலையோட்டை உண்கலமாக உகப்புடன் கொண்டவர், (யாவரெனில்) இடையிடையே தேன்கூடுகள் நிறைந்த சந்தன மரங்களின் வலிய கிளைகளை ஒடித்து அவற்ருல் காட்டினிடை நிலத்தைக் கிளறி தினை விதைத்து விளைவு செய்யும் வேடர்கள் வாழும் திருக்கற்குடி மாமலையில் எழுந்தருளியிருக்கும் சிவபிரானுரேயாவர்,

உகப்பு - உயர்வு, பிரமனின் தலையைச் கொய்த வீரச் செயலாகையால் அதனைக்கைக்கொண்டு உயர்ந்தார் என்பதாம். இச்சொல்லுக்கு விருப்பு என்ற பொருளும் உள்ளதால் விருப்புடன் கொண்டார் என்றும் கொள்ளலாம்.

இறைவர் மான், மழு, பாம்புகள், புலித்தோல், தீ முதலியன கொண்ட வரலாறுகளையெல்லாம் கந்தபுராணம் தக்ஷகாண்டம் ததீசி உத்தரப்படலத்திலும், எமது மற்றொரு வெளியீடான சிவபரத்துவ மாட்சிமை அல்லது தக்ஷ காண்டம் என்ற நூலிலும் விரிவாகக் காணலாம்.

வேடர் சந்தனமரத்தின் நடுவில் தினைவித்தி விளைக்கின்றார்கள் என்பது ஆன்மாக்கள் வினைப்போகம் தடையாயிருப்பினும் அவற்றை நீங்கிச் சிவபோகத்தை வித்தி விளைக்கும் புண்ணியபூமி எனக் குறிப்பித்தவாறு. (திருத்தருமையாதீனக் குறிப்புரை)

வாளமர் வீரம் நினைந்த இராவணன் மாமலை யின்கீழ்த்
தோளமர் வன்றலை குன்றத் தொல்விர லூன்று துணைவர்
தாளமர் வேய்தலை பற்றித் தாழ்கரி விட்ட விசைபோய்க்
காளம தார்முகில் கீறுங் கற்குடி மாமலை யாரே. 8

8. வாளால் விளக்கும் போரில் தனது வீரத்தையே பெரிதாக நினைத்த இராவணனைத் திருக்கயிலாய மாமலையின் கீழ் அவனது தோள்களில் பொருந்திய பத்துத்தலைகளும் குன்றும்படி தமது ஒரு திருவிரலையூன்றிய தொன்மையான துணைவர் (யாவரெனில்) வேரில் பொருந்திய மூங்கில் மரத்தின் நுனியை தாழ்ந்த யானை பற்றிவிட்ட விசையால் கரியமேகம் கீறப்படும் திருக்கற்குடிமாமலையில் வீற்றிருக்கும் சிவபிரானுரே யாவர்.

தலை குன்ற—தலைகள் நசுங்கும்படி, தொல் துணைவர்—உயிர்களுக்கு இப்பிறவியிலன்றி முற்பிறவிகளிலும் இனி வரும் பிறவிகளிலும் இறைவரே விழுமிய துணைவர் ஆவர்

என்பதை வலியுறுத்த தொல்துணைவர் என்றருளினர். திருக் கயிலையைப் பெயர்க்க முயன்ற இராவணனுக்கும் இறைவரே துணைவர், அவனது வலி குன்றும்படி நெருக்கிய இறைவரே பின்னர் அவனுக்கு அருள் புரிந்தமையை ஓர்க.

தாள்—அடி, இங்கு வேரைக் குறித்தது. தாழ்கரி—மூங்கில் மரத்தை விட உயரத்தால் தாழ்ந்த யானை. யானை தனது துதிக்கையினால் மூங்கிலின் நுனியைப்பற்றி வளைக்க முயல்கிறது. மூங்கில் மிக உயரமாக இருப்பதால் வளைக்க இயலாது விட்டுவிடுகிறது. அப்படி விடப்பட்ட விசையால் மூங்கிலின் நுனி மேகத்தினுள் நுழைகிறது. இச் செயல் மேகத்தைக் கீறுவது போலாகிறது. இத்திருப் பாடலின் பின்னிரண்டு அடிகளில் கூறப்படும் செய்தி இஃது என்று அறிக. இதனால் மலையில் உயரம், மூங்கிலின் உயரம் யானையின் வலிமை முதலியன கூறப்பட்டன. ''திருவருள் துணையிருப்பின் ஆணவமான படலத்தையுங் கீறிக் கருணை மழையைக் காணலாம் எனக் குறிப்பித்தவாறு'' என்பது திருத்தருமையாதீனக் குறிப்புரையாசிரியர் கூறும் உள் பொருளாம்.

**தண்டமர் தாமரை யானுந் தாவியிம் மண்ணை யளந்து**
**கொண்டவ னும்மறி வொண்ணாக் கொள்கையர் வெள்விடையூர்வர்**
**வண்டிசை யாயின பாட நீடிய வார்பொழில் நீழல்**
**கண்டமர் மாமயி லாடுங் கற்குடி மாமலை யாரே. 9**

9. நாளம் எனப்படும் தண்டின் மீது உள்ள தாமரை மலரில் வாசஞ்செய்யும் பிரமதேவனும், தாவி இவ் வுலகத்தை (மூவுலகத்தை ஈரடியால்) அளந்து கொண்ட வனாகிய திருமாலும் அறியவொண்ணாத தன்மையர். வெண் மையான எருதை ஊர்தியாகக் கொள்வர். (யாவரெனில்) நீண்ட சோலையின் நீழலில் வண்டுகள் பாடக்கண்டு (பாடலுக் கேற்ப) ஆடும் அழகிய மயில்கள் விரும்பும் திருக் கற்குடிமாமலையாராகிய சிவபிரானேயாவர்,

''நிழல்கண்டு அதை மேகம் என்று மயங்கி ஆடும் மா மயில் அமரும் கற்குடிமாமலையின் ஈசர்'' என்பது கோவை அறிஞர் திரு.சி.சு.கண்ணுயிரம் அவர்கள் உரைக் குறிப்பு.

''பொழிலின் நீழலில் வண்டுகள் பாடக் கண்டு மயிலாடும் கற்குடியென்றது, திருவடி நீழலில் திளைத்திருக்கும் சிவயோகியர் பரநாத இன்னிசை கேட்டு ஆனந்தக் கூத்தாடுகின்ற இடம் என அறிவித்தவாறு'' (திருத்தருமை யாதீனக் குறிப்புரை).

மூத்துவ ராடையி னாரும் மூசு கடுப்பொடி யாரும்
நாத்துவர் பொய்ம்மொழி யார்கள் நயமில் அராமதி வைத்தார்
ஏத்துயர் பத்தர்கள் சித்தர் இறைஞ்ச அவரிட ரெல்லாம்
காத்தவர் காமரு சோலைக் கற்குடி மாமலை யாரே. 10

10. மூன்று வகையான துவராடைகளை உடுப்பவர்களான பௌத்தர்களும் மிகுதியாகக் கடுக்காய்ப்பொடியினைத் தின்பவர்களான சமணர்களும் நாவே துவர்க்கும்படியான பொய்ம்மொழிகளையும் நயமில்லாத மொழிகளையும் பேசுபவர்கள். (எனவே அவர்களுடைய மொழிகளைக் கேளாதீர் என்பது உபதேசம்) பாம்பையும் சந்திரனையும் தலையில் வைத்தவரும், ஏத்தும் உயர்ந்த பக்தர்களும் சித்தர்களும் வழிபட அவர்களை இடர்களினின்றும் காத்தருளியவரும் (யாவரெனில்) அழகு மிக்க சோலைகள் நிரம்பிய திருக்கற்குடிமாமலை ஈசரேயாவர். (அவரை இறைஞ்சி நீவிரும் இடர்களினின்றும் நீங்குவீராக என்று குறிப்பிட்டருளியதாகக் கொள்க).

மூத்துவராடை—மூவாடை, துவராடை என ஈரிடத்தும் கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது. மூன்று வகையான துவராடை என்பதாம். இதுபற்றி கோவை அறிஞர் திரு. சி.சு.கண்ணுயிரம் அவர்கள் உதவிய குறிப்பு வருமாறு:— மூத்துவராடை—மூவாடை, துவராடை என்று பிரித்துக்

கூட்டுக. அவை அந்தரவாஸகம் (உள்ளாடை)" ஸங்காடி (அரையிற்கட்டும் ஆடை) உத்தராஸங்கம் (மேற்போர்வை) இவற்றை மணிமேகலை டாக்டர் உ.வே.சா.ஐயர் அவர் களின் பதிப்பு(1898), பௌத்தசங்கம்—வஸ்திரம், பக்கம் 99ல் காண்க.

கடுப்பொடி—கடுக்காய்ப் பொடி. கடு என்பதைத் திரி கடுகம் அஃதாவது சுக்கு, மிளகு, திப்பிலி எனக்கொண்டு இவற்றின் பொடியை உண்பர் என்றும் கொள்ளலாம். கடுப்பொடி உண்பது உண்ட உணவு செரிப்பதற்கோ அல்லது வாய்நாற்றம் போவதற்கோ அன்றி இரண்டுக்குமோ எனக்கொள்க.

நாத்துவர் பொய்ம்மொழி—நாக்கு துவர்க்கும் படியான பொய்ம்மொழி. 'நாக்கூசாது பொய் சொல்லுகிறான்' என்று கூறும் உலக வழக்கும் காண்க. நாத்துவர் பொய்ம் மொழியார்கள், நயமில் மொழியார்கள் என இருவகை யாகக் கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது.

நயமில் மொழியார்கள்—நயமில்லாத மொழிகளை உடை யவர், அத்தகைய வார்த்தைகளைப் பேசுபவர் என்பதாம்.

நயம்—மகிழ்ச்சி, இன்பம், நன்மை, நற்பயன், 'நய மென்ப மகிழ்ச்சி இன்பம் நன்மை நற்பயனும் நாற்பேரே' என்பது யகரவெதுகை. எனவே இவைகளில் ஒன்று கூட இல்லாத மொழிகளைப் பேசுபவர்கள் என்பதாம்.

இடரெல்லாம் காத்தவர்—இடர்களையெல்லாம் நீக்கியும் இனி வராது காத்தலும் செய்பவர்.

காமரு வார்பொழில் சூழுங் கற்குடி மாமலை யாரை
நாமரு வண்புகழ்க் காழி நலந்திகழ் ஞானசம் பந்தன்
பாமரு செந்தமிழ் மாலை பத்திவை பாடவல் லார்கள்
பூமலி வானவ ரோடும் பொன்னுல கிற்பொலி வாரே. 11

திருச்சிற்றம்பலம்

11. அழகிய நீண்ட பொழில்கள் சூழும் திருக்கற்குடி மாமலையைக் கோயிலாகக் கொண்ட இறைவரை, அனைவர் நாவிலும் எந்நாளும் பொருந்தி வழங்கும் வண்மையும் புகழுமுடைய சீகாழியில் தோன்றிய சைவநலந்திகழும் ஞானசம்பந்தன் பாடிய பாக்கள் மருவிய செந்தமிழ்மாலையாகிய இப்பத்துப்பாடல்களையும் பாடித் துதிக்கவல்லவர்கள் உயர்ந்தவர்களாகிய சிவகணத்தவர்களோடும் அழகு மிக்க திருக்கயிலையைச் சென்றடைவர்.

வண்புகழ்க் காழி—வண்மையுடைய காழி, புகழுடைய காழி என ஈரிடத்தும் கூட்டி உரைக்க. வண்மை-கொடை உண்மை,வளம், புகழ், வலிமை எனப் பலபொருள் தரும் சொல். நலந்திகழ் என்பதைக் காழிக்கும் அடையாக்கி நன்மைகள் விளங்கும் சீகாழி எனப்பொருள் கொள்ளலும் பொருந்தும். பூமலி - அழகு மிக்க. இதைவானவர்க்கும் அடைமொழியாக்கலாம்.

பொன்னுலகம் — இந்திரனுடைய உலகம் என்பது சாதாரண பொருள். அது சுவர்க்கம் எனப்படுவது. ஆனால் இங்குப் பொன்னுலகம் என்பது சிவபிரானது திருக்கயிலாயத்தைக் குறிக்கும். இப்பொருள் தருதலை சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருநொடித்தான்மலைத் திருப்பதிகம் 5ம் பாடலால் அறியலாம்.

தலவரலாறு—உய்யக்கொண்டான்மலை என வழங்கப்படும் திருக்கற்குடி காவிரிதென்கரை நான்காவது தலமாகும். மலைக்கோயில், மேற்கு பார்த்த சந்நிதி. நந்திவர்ம பல்லவனால் திருப்பணி செய்விக்கப் பெற்றமையால் நந்திவர்மமங்கலம் எனக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. மார்க்கண்டேயர் வழிபட்டு அருள் பெற்ற தலமெனவும் முனிவர்களுக்குக் குருமூர்த்தியாக எழுந்தருளி அரிய நூல்களை உபதேசித்த தலமெனவும் கூறப்படுகிறது. கரன்

என்பானும் ஈழத்தரசனும் வழிபட்டுப் பேறு பெற்றனர் என்றும் வரலாறு கூறுகிறது. மூவர் முதலிகளும் இத் தலத்தை வழிபட்டுப் பாடியுள்ளனர்.

இது திருச்சி நிலையத்திலிருந்து வடமேற்கில் சுமார் 2½ கிலோ மீட்டர் தொலைவிலும், திருச்சி கோட்டை நிலையத் தினின்றும் சுமார் 5 கிலோ மீட்டர் தொலைவிலும் உள்ளது. பேருந்து வசதிகளும் உள.

இறைவர் திருப்பெயர் — உச்சிநாதர், விழுமியநாதர் கற்பகநாதர், முத்தீசர், உய்யக்கொண்ட நாயனர் முதலியன.

இறைவியார் திருப்பெயர்—அஞ்சனுட்சி (இரண்டு சந்நிதி கள் உள்ளன. தீர்த்தம்-பொன்னெளி ஓடை, குடமுருட்டி, ஞானவாவி, எண்கோணக் கிணறு, நாற்கோணக் கிணறு முதலியன.

சிவம்

---

## புகலியர்கோன் புகழ்மாலை

புழுவாய் உணங்கிப் பழவினை யாற்புலம் புற்றவர்க்குக்
கழுவாய் வளவயற் காழியுள் காட்டிய கைவிரலார்
மழுவார் மலர்க்கரத் தாரருட் பாலுணும் மாதவரென்
றெழுவார் தொழுவார் அவரடித் தொண்டருக் கேற்றங்களே.

—தில்லியூர்ச் சிவனடியார்






உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்

# திருமூக்கீச்சரம்

(உறையூர்)

பதிகவரலாறு:—திருக்கற்குடி மாமலையின் மேல் எழுந்தருளியிருந்தகனகக்கொழுந்தாகிய சிவபெருமானைப்போற்றி நற்றமிழ்மாலை சாத்தியருளிய திருஞானசம்பந்தப் பெருமான் திருமூக்கீச்சரம் சென்றணைந்து பஞ்சவர்ணேசுவரரைப் பணிந்து பாடியது இத்திருப்பதிகம்.

பண்—செவ்வழி] திருச்சிற்றம்பலம் [2-ம் திருமுறை

சாந்தம்வெண்ணீ றெனப்பூசி வெள்ளஞ்சடை வைத்தவர்
காந்தளாரும் விரலேழை யொடாடிய காரணம்
ஆய்ந்துகொண்டாங் கறியந் நிறைந்தாரவ ரார்கொலோ
வேந்தன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோர்
மெய்ம்மையே. 1

பதிகப்பொழிப்புரை:— 1. வெண்மையான திருநீற்றைச் சந்தனம் என்றணிந்துகொண்டு கங்கையைச் சடையின்மேல் வைத்த இறைவராகிய சிவபெருமான், காந்தள் மலரையொத்த கைவிரல்களையுடைய உமாதேவியார் உடனிருக்க ஐந்தொழில் திருநடனமாடிய காரணத்தை ஆராய்ந்துகொண்டு அவ்வாராய்ச்சியின் முடிவாகிய ஞானத்தால் நிறைந்தவர் யாவருளர்? (ஒருவருமிலர் என்றவாறு). இவை வேந்தனாகிய கோச்செங்கட்சோழநாயனார் கட்டுவித்த திருமூக்கீச்சரத்துள்ள இறைவனார் இடைவிடாது செய்கின்ற நித்தியத் தொழில்களாகும்.

நிறைந்தார்—இது ஞானத்தால் நிறைந்த அடியவர்களைக் குறிக்கும். மெய்ம்மை—என்றும் அழியாமல் இருக்கும் உண்மை. அது தொடர்ந்து நிகழும் ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய திருவைந்தொழில்.

**வெண்டலையோர் கலனாப் பலிதேர்ந்து விரிசடைக்**
**கொண்டலாரும் புனல்சேர்த் துமையாளொடுங் கூட்டமா**
**விண்டவர்தம் மதிலெய்தபின் வேனில்வேள் வெந்தெழக்**
**கண்டவர்மூக்கீச் சரத்தெம் அடிகள்செய் கன்மமே. 2**

2. வெண்டலை ஒன்றை உண்கலனாகக் கொண்டு பலி தேர்ந்ததும், விரித்த சடையில் மேகத்தின் நீரால் நிறைந்த கங்கையைச் சேர்த்ததும், உமாதேவியாரொடு கூடியிருப்பதும், பகைவர்களுடைய மூன்று மதில்களையும் எய்தபின் மன்மதனை எரித்து மீண்டும் அவனுக்கு உயிர்கொடுத்தது மாகிய இவைகளெல்லாம் திருமூக்கீச்சரத்தில் கோயில் கொண்டுள்ள எம் தலைவராகிய சிவபெருமானின் செயல்களாகும்.

வெண்டலை—பிரம கபாலம். பலி தேர்தல் - பிச்சையெடுத்தல். கொண்டலாரும்புனல் - கங்கையைத் தாங்கிய வரலாற்றைக் கந்தபுராணம், தக்ஷகாண்டம், ததீசி உத்தரப் படலத்திலும், எமது மற்றொரு வெளியீடான சிவபரத்துவ மாட்சிமை அல்லது தக்ஷகாண்டம் என்ற நூலிலும் விரிவாகக் காணலாம். அந்த வரலாற்றின்படி இறைவர் தலையில் தாங்கிய கங்கை மேகத்தின் நீரால் நிறைந்ததன்றாயினும் புனல் என்ற பொதுமைபற்றி இங்ஙனம் கூறி அருளியதாகக் கொள்க.

விண்டவர் - பகைவர், இங்கு முப்புரத்தசுரர்களைக் குறித்தது. வேனில்வேள் - மன்மதன், வேனிற்காலம் எனப்படும் வஸந்தருது மன்மதனின் ஆட்சிக்குரிய காலம் ஆகும். எனவே வேனில்வேள் எனப்பட்டான். கன்மம் - செய்தொழில்.

**மருவலார்தம் மதிலெய்த துவும்மான் மதலேயை**
**உருவிலாரவ் வெரியூட்டி யதும்முல குண்டதால்**
**செருவிலாரும் புலிசெங் கயலானை யினுன்செய்த**
**பொருவில்மூக்கிச் சரத்தெம் அடிகள் செயும் பூசலே.** 3

3. பகைவர்களாகிய முப்புரத்தசுரர்களுடைய மூன்று மதில்களேயும் எய்த செயலும், திருமாலின் மகனுன மன்மதனை அவன் உருவம் நிறைய (அஃதாவது பொடியாகும்படி) எரிக்கு உணவாக ஆக்கியதும், உலகம் முழுமையையும் ஆண்டதால் சேர, சோழ, பாண்டியனென்னும் மூவேந்தரும் தானேயாயின கோச்செங்கட்சோழ நாயனுர் கட்டுவித்த ஒப்பற்ற திருமூக்கீச்சரத்துக் கோயிலுள் எழுந்தருளியிருக்கும் எமது கடவுளாகிய சிவபெருமான் செய்த பூசல்களாகும்.

உலகுண்டதால்—சேரர், சோழர், பாண்டியர் ஆக மூவேந்தர் நாடுகளேயும் தாமே ஆண்டதன் குறிப்பு. ''தென்னவனுய் உலகாண்ட செங்கணுர்க்கு அடியேன்'' என்ற திருத்தொண்டத்தொகையும் காண்க.

இத்திருப்பாடலின் மூன்ருவது அடியில் மூவேந்தர்களுடைய கொடிகளைக் குறிப்பிட்டு அதன் மூலம் அவர்களுடைய நாடுகளே அறியச் செய்தார். வில்—சேரர் கொடி, புலி—சோழர் கொடி, கயல்—(மீன்) பாண்டியர் கொடி.

பூசல்—திரிபுரதகனம், காமதகனம் ஆகியவை இறைவர் செய்த போர்கள். இவற்ருல் உலகம் அழியாமல் காக்கப் பட்டது.

**அன்னமன்னந் நடைச்சாய லாளோ டழகெய்தவே**
**மின்னேயன்ன சடைக்கங்கை யாள்மேவிய காரணம்**
**தென்னன்கோழி யெழில்வஞ்சியும் ஓங்குசெங் கோலினுன்**
**மன்னன்மூக் கிச்சரத்தடிகள் செய்கின்ற தோர்மாயமே.** 4

4. அன்னம் போன்ற அழகிய நடையும் அழகும் உடைய உமாதேவியாரோடு (மேலும்) அழகுண்டாகும்படி மின்னலையொத்து ஒளிவிடும் திருச்சடையில் கங்கையாள் விருப்பத்துடன் பொருந்தியிருக்கும் காரணம் (ஆராயப் புகின்) பாண்டியனும், உறையூர் வஞ்சி இவைகளைத் தலை நகராகக்கொண்ட சோழ சேரநாடுகளிலும் தனது செங் கோல் ஓங்கும் மன்னவனுமான கோச்செங்கட்சோழ நாயனுர் கட்டுவித்த திருமூக்கீச்சரத்துக் கோயில் கொண்ட எமது கடவுளாகிய சிவபிரான் செய்த ஒரு மாயமேயாம் (என்று அறியக் கடவோம்).

சாயல்—மென்மை, அழகு, மேம்பாடு. தென்னன் - பாண்டியன், ''தென்னவனய் உலகாண்ட செங்கணுர்க் கடியேன்'; (திருத்தொண்டத்தொகை, 11ம் பாடல்) சோழநாடு மட்டுமன்றிச் சேரநாடு, பாண்டியநாடு இவை யும் கூட இவரது செங்கோலுக்கு உட்பட்டிருந்தன என்பது இத்திருப்பாடல் மூன்ருவது அடியால் கூறப்படும் செய்தி யாகும். மாயம் - பிறர் அறிந்து காரணம் சொல்லவியலாத செயல்.

**விடமுனரவ் வழல்வாய தோர்பாம்பரை வீக்கியே**
**நடமுனரவ் வழலாடுவர் பேயொடு நள்ளிருள்**
**வடமன்நீடு புகழ்ப்பூழி யன்தென்ன வன்கோழிமன்**
**அடல்மன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோரச்சமே. 5**

5. அழல் போன்ற நஞ்சை வாயில் உடைய பாம்பை அரையில்கட்டி, பேய்களுடன் அழலின் முன் நள்ளிருளில் திருநடனமாடுவர். (இவை) வடதிசையிலும் நீடிய புக ழுடையவனும், தென்னவனுகியபாண்டியனும், உறையூர் மன்னவனும், போர்வேந்தனுமாகிய கோச்செங்கட்சோழ நாயனுர் கட்டுவித்த திருமூக்கீச்சரத்து எழுந்தருளியுள்ள எமது கடவுளாகிய சிவபிரானுர் செய்யும் அச்சந்தரும் செயல்களாகும்.

விடப்பாம்பை அரையில் கட்டுதலும், பேய்களோடு நள்ளிருளில் ஆடுதலும் அச்சந்தரும் செயல்களாம் என்றவாறு.

வெந்தநீறு மெய்யிற் பூசுவராடுவர் வீங்கிருள்
வந்தெனுரவ் வளைகொள்வதும் இங்கொரு மாயமாம்
அந்தண்மா மானதன் நேரியன் செம்பியனுக்கிப
எந்தைமூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோரேதமே. 6

6. நன்கு தீயினில் வெந்த திருநீற்றைத் தமது திருமேனியில் பூசுவார், நள்ளிரவில் நட்டம் ஆடுவர் (இத்தகைய இவர்) இங்கே வந்து எனது வளையல்களைக் கவர்ந்து கொள்வதும் ஒரு மாயச் செயலாம் (என்று இறைவன் பால் காமுற்ற ஓரிளமகள் கூற) அச்செயல் அழகிய தன்மையுடைய மானதன், நேரியன், செம்பியன் (என்று மூவகையாக உரைக்கப்பெறும்) கோச்செங்கட்சோழநாயனுர் கட்டிய திருமூக்கீசரத்து எந்தையாகிய சிவபிரான் (இவளுக்குச்) செய்கின்றதோர் ஏதமாகும்.

இத்திருப்பாடலின் இரண்டாவது அடி இறைவன் பால் காமுற்ற ஓரிளம் பெண்ணின் கூற்ருக அகப்பொருட் சுவைபடநின்றது. இங்ஙனம் காமுற்ற அப்பெண்ணின் உடல் காமநோயினுல் இளைத்து வளையல்கள் தாமாகவே சோர்ந்து விழுந்துவிடுகின்றன. இம்மாதிரி வளைகள் சோர்தற்கு அவ்விறைவனே காரணமாதலின் அவன் கவர்ந்து கொண்டான் என்று கூறினுள். ஏதம் - துன்பம், இங்கு அப்பெண்ணுக்கு விளைந்த காமநோயைக் குறித்தது.

மானதன்—பெருமையுடையவன்; மானம்—பெருமை; நேரியன், செம்பியன் இவையும் சோழனின் பெயர்களேயாம்.

அரையிலாருங் கலையில்லவன் ஆணெடு பெண்ணுமாய்
உரையிலாரவ் வழலாடுவர் ஒன்றலர் காண்மினே
விரவலார்தம் மதில்மூன் றுடன்வெவ்வழ லாக்கினுன்
அரையன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோரச்சமே. 7

7. இடையில் பொருந்தும் ஆடையில்லாதவர், ஆணொடு பெண்ணுமானவர், (இன்ன தன்மையர் என்று முழுமையாக உரைக்க) உரையில்லாதவர். எரி ஏந்தி ஆடுவர், ஒன்றல் லாது பலவாக இருப்பவர், பகைவர்களுடைய மூன்று புரங் களையும் கொடிய தீக்கு இரையாக்கினர். இவைகள் அரச னான கோச்செங்கட் சோழநாயனர் கட்டுவித்த திருமூக்கீச் சரத்துக் கோயில் கொண்ட கடவுளாகிய சிவபிரான் செய் கின்ற அச்சந்தரும் செய்கைகளாகும்.

ஆணொடு பெண்ணுமாய்—''பெண்ணுமாய் ஆணுமாகி'' (பெரியபுராணம், தில்லைவாழந்தணர் புராணம், 1) 'பெண் ணாகி ஆணாய் அலியாய்...' (திருவாசகம், திருவெம்பாவை, 18) இவைபோன்ற பிறவாக்குகளையும் ஒப்பு நோக்குக.

உரையிலார்—உரை என்னும் வாக்கைக் கூறவே உபலட் சணமாக மனமும் கொள்க. ''யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ'' என்பது சுருதி. ''மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே'' (திருவாசகம் - சிவ புராணம், 45)

ஒன்றலர்காண்—ஒன்றாக மட்டும் இருப்பவரல்லர், பல ராகவும் இருப்பவர் என்பதாம். ''ஏகன் அனேகன்'' (திரு வாசகம், சிவபுராணம், 5), ''பல பல வேடமாகும் பரன்'' (திருஞானசம்பந்த சுவாமிகள், கோளறு பதிகம், 9ம் பாடல் பகுதி); ''திருமேனி ஒன்றல்லன்'' (திருவாசகம், திருவெம் பாவை 10)

ஈர்க்குநீர்செஞ் சடைக்கேற்ற துங்கூற்றை யுதைத்ததும்
கூர்க்குநன்மூ விலைவேல்வல னேந்திய கொள்கையும்
ஆர்க்கும்வாயா னரக்கன்னுரத் தைநெரித் தவ்வடல்
மூர்க்கன்மூக்கீச் சரத்தடிகள் செய்யாநின்ற மொய்ம்பதே. 8

8. இழுக்குந் தன்மையதாகிய புனலைச் (கங்கையாற்றினை) சிவந்த சடையில் ஏற்றதும், இயமனைக் காலாலுதைத்ததும், கூர்மையுடைய மூவிலைச் சூலத்தைக் கையிலேந்திய கொள்கையும், ஆரவாரஞ் செய்யும் வாய்களையுடையவனும் அரக்கனும் மூர்க்கனுமாகிய இராவணனது உடலை நெரித்த வெற்றியும் திருமுக்கீச்சரத்துக் கடவுளாகிய சிவபிரானது வல்லமை பொருந்திய செயல்களாகும்.

இத்திருப்பாடலின் பின்னிரண்டடிகளை "ஆர்க்கும் வாயான் அரக்கன் மூர்க்கன் உரத்தை நெரித்த அவ்வடல் மூக்கீச்சரத்தடிகள் செய்யா நின்ற மொய்ம்பதே" என இயைத்துப் பொருள் உரைக்கப்பட்டது. அடிகள்—கடவுள் தலைவன், குரு, முனிவர் முதலிய பொருள். அடல்—வெற்றி; உரம்—மார்பு, இங்கு உடல் எனப் பொருள் கொள்ளப் பட்டது. மொய்ம்பு—வலிமை, இங்கு அத்தசைய செயல் களைக் கூறியது.

மூர்க்கன்—இச்சொல் வடமொழியில் மூடன், அறிவிலி என்ற பொருள்தரும். தமிழ் மொழியில் பிடிவாதக்காரன் என்ற பொருளைத்தரும். 'மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா' எனக் கூறும் வழக்குங் காண்க. இவ்விரு பொருளும் இராவணனுக்குப் பொருந்தும். எங்ஙனமெனில், கூறுதும். இராவணன் வேதசாத்திரங்கள் அனைத்தையும் பயின்றவனாயிருந்தும் இறைவரது திருக்கயிலையை வணங்கிச் செல்லாது ஆணவங் காரணமாக அத்திருமலையைப் பெயர்த்தெடுக்க முயன்றதனால் "கற்றும் அறிவிலி" என்பதற்குச் சான்றானான். "கடுகிய தேர் செலாது, கயிலாயமீது கருதேல் உன்வீரம், ஒழி நீ, முடுகுவதன்று கன்மம்" (அப்பரடிகள், பொது, தசபுராணம்) எனத் தடுத்த பாகன் வார்த்தைகளைக் கேளாது அவனை முனிந்து விலக்கி 'விடுவிடு' வென்று சென்று மலையைப் பெயர்த்தெடுக்க முயன்றானாதலின் பிடிவாதக்காரன் ஆயினான். எனவே இருமொழிப் பொருளிலும் அவன் மூர்க்கனாயினான்

என்பதறிக. அரக்கன்—இரக்கம் என்ருெரு பொருள் இல்லாதவன்.

நீருளாரும் மலர்மே லுறைவான் நெடுமாலுமாய்ச்
சீருளாருங் கழல்தேட மெய்த்தீத் திரளாயினுன்
சிரினலங் கொளிர்தென்ன வன்செம்பி யன்வில்லவன்
சேருமூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோர்செம்மையே. 9

9. தாமரைமலர் மேல் உறையும் நான்முகனும் நெடு மாலும் ஆகிய இருவருமாய்ச் சிறப்புப்பொருந்திய திருமுடி யையும் திருவடிகளையும் தேடுமாறு மெய்த்தீத்திரளாய் நின்ருன். (இது) பெருமையினுல் மிக விளக்கத்துடன் கூடிய பாண்டியனும், சோழனும், சேரனுமாகிய கோச்செங்கட் சோழநாயனுர் சேர்கின்ற திருமூக்கீச்சரத்துக் கடவுளாகிய சிவபிரானுரது செம்மையான செயலாகும்.

கழல் தேட—நான்முகனும் திருமாலுமாகிய இருவரும் தேட என்றதால் கழலுடன் திருமுடியையும் உரையில் கொள்ளப்பட்டது.

செம்மை—நான்முகனுக்கும் திருமாலுக்கும் அகந்தை நீங்கி நல்லறிவு வரக் காரணமாயிருந்தமையின் தீத்திரளா யினது செம்மையே என உரைத்தருளினுர்.

வெண்புலான்மார் பிடுதுகிலினர் வெற்றரை யுழல்பவர்
உண்பினலே யுரைப்பார் மொழி யூனமதாக்கினுன்
ஒண்புலால்வேல் மிகவல்லவ னேங்கெழிற் கிள்ளிசேர்
பண்பின்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோர்பச்சையே. 10

10. அறிவற்றவர்களும் பருத்த உடலின்மேல் ஆடை போர்த்தியவர்களுமான பௌத்தர்களும் ஆடையின்றி வெற்றுடலுடன் திரியும் சமணர்களும் தத்தமது சமயக் கொள்கைகளால் உரைக்கும் மொழிகளைக் குற்றமுள்ளவை

களாக்கினுன். (இச்செயல்) ஒளி வீசுவதும், எதிரிகளின் மார்பைத் தொளைத்தலால் தசைத் தொடர்புடையதுமான வேற்படைப் போரில் மிக வல்லவனும் ஓங்கிய எழிலுடைய வனுமான சோழ மன்னராகிய கோச்செங்கட் சோழ நாயனுர் சேர்ந்து வணங்குகின்ற திருமூக்கீச்சரத்துக் கடவுளாகிய சிவபிரான் செய்கின்றதொரு நிலைத்த செயலாகும். (ஊனமாக்கினது நிலைத்த செயல் என்பதாம்).

வெண்புலால் மார்பு—வெண்மை அறிவீனத்தையும், புலால் மார்பு தசைப் பொதி அஃதாவது பருத்த உடலையும் குறித்தது. இதைச் சமணருக்கும் கூட்டியுரைக்கலாம்.

உண்பினுல்—தத்தம் சமயக் கொள்கைகளினுலே. ஊனம்—குறைபாடு, குற்றம், அழிவு, தீமை முதலிய பொருளைந்தரும். ஊனமதாக்கினுன்—இதற்கு அழியும் படிச் செய்தான் எனவும் பொருள் கொள்ளலாம்.

ஒண்புலால்வேல் — வேல் கூர்மையினுல் ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்றது. பகைவர் மார்பை ஊடுருவிச் செல்லுதலால் தசைத் தொடர்பும் உடையதாகிறது. எனவே ஒண்புலால்வேல் என்ருர். இச்சோழர் வேற்படை கொண்டு செய்யும் போரில் வல்லவர் என்பதை மிகவல்லவன் என்று குறிப்பிட்டருளினுர்.

பச்சை—பச்சையான அதாவது அழியாது என்றும் நிலைத்த செயல். சமணர் கொள்கைகளை ஊனமாக்கியது நிலையான செயல் என்பதாம் (சிவக்கவிமணியவர்களின் உரையைத் தழுவியது). பச்சை என்பதற்கு வெளிப்படை யெனப் பொருள் கொண்டு, ''மொழி ஊனமதாக்கினுன், அவ்வாறு ஆக்கியது பச்சையே என்க''. என உரைப்பர் கோவை அறிஞர் திரு சி. சு, கண்ணுயிரம் அவர்கள்,

மல்லையார்மும் முடிமன்னர் மூக்கீச்சரத் தடிகளைச்
செல்வராக நினையும்படி சேர்த்திய செந்தமிழ்
நல்லராய்வாழ் பவர்காழி யுள்ஞான சம்பந்தன
சொல்லவல்லா ரவர்வானுல காளவும் வல்லரே. 11

திருச்சிற்றம்பலம்

*11.* வலிமை பொருந்திய மும்முடி மன்னரான கோச்செங்கட்சோழநாயனர் கட்டிய திருமூக்கீச்சரத்துக் கோயில் கொண்ட சிவபிரானைச் செல்வராக நினையும்படிச் சேர்த்திய, நல்லவர்களாய் வாழ்கின்றவர்கள் நிறைந்த சீகாழியுள் தோன்றிய திருஞானசம்பந்தனது செந்தமிழ்ப் பாடல்களாகிய இவை பத்தையும் பாடவல்லவர்கள் வானுலகத்தையும் ஆளவல்லவர்களாவர்.

மல்— வலிமை; மும்முடிமன்னர் - சேர, சோழ பாண்டிய நாடுகள் எனப்படும் மூன்று நாடுகளையும் வென்று அடிப்படுத்தியதால் கோச்செங்கட்சோழருக்கு ஏற்பட்ட பெயர்.

செல்வராக நினைதல்—சிவபெருமான் ஒருவரே ஸர்வைச்வர்ய ஸம்பன்னர். அவரே பொன்னும் மெய்ப்பொருளும் தரவல்லவர். மற்ற எல்லாக் கடவுளர்களையும் விலக்கி அவர் ஒருவரே தியானிக்கற்பாலர் என்ற பொருள் தரும் ''சிவ ஏகோத்யேய: சிவம் கர: ஸர்வம் அன்யத் பரித்யஜ்ய'' என்ற அதர்வசிகோபரிஷத் வாக்கியப் பொருளை குறிப்பிட்டருளியதாகக் கொள்க. சேர்த்திய - நெறிப்படுத்திய, ஆற்றுப்படுத்திய, அஃதாவது திருமூக்கீச்சரத்தடிகளைச் செல்வராக நினையும்படி நெறிப்படுத்திய செந்தமிழ் என்பதாம்.

வானுலகாளவும் வல்லரே-வானுலகும் ஆளவல்லரே என 'உம்' மை மாற்றியமைத்துப் பொருள் கூறப்பட்டது. இது நிலவுலகு ஆளவல்லர் என்பது மட்டுமன்றி வானுலகும் ஆளவல்லர் என்று குறிப்பிட்டதாம்,

சொல்லவல்லார் – சொல்லுதலின் அருமை குறித்தது. சொல்லுதல் - ஓதுதல், பாடுதல் என்ற பொருளில் வந்தது.

தலவரலாறு :—காவிரி தென்கரையில் ஐந்தாவது தலமான திருமூக்கீச்சரம் என்பது திருச்சிராப்பள்ளிக் கோட்டை இரயில் நிலயத்தினின்றும் சுமார் 2½ கிலோ மீட்டர் தொலைவில் உள்ள உறையூரில் உள்ள திருக்கோயிலாகும். தலமரம் வில்வம் ஆதலின் வில்வாரணியம் என்றும் வழங்கப்படும். வீரவாதித்தன் என்னும் சோழவரசன் உலாவரும்போது ஒரு கோழியினால் அவனைத் தோற்கச் செய்து இறைவர் தமதிருக்கையை வெளிப்படுத்தியதால் இத்தலம் கோழி எனவும் வழங்கப்படும்.

உதங்க முனிவர், காசிப முனிவரின் மனைவி கர்த்துரு, அவள் மகன் கார்க்கோடகன் ஆகியோர் பூசித்துத் தத்தமக்கு ஏற்பட்டிருந்த பாவத்தினையும் நோயினையும் போக்கிக் கொண்டனர் என்பது முதலான வரலாறுகள் கேட்கப்படுகின்றன. கருடன் வழிபட்டுப் பேறடைந்தான் என்றும், வேடன் ஒருவன் பசுநிரை கவர்ந்து கொண்டு வரும்போது இடையூறாய் இருந்ததொரு கிழட்டுப் பசுவை இங்கு விட்டுச் சென்றதால் பேறடைந்தான் என்றும் கூறப்படுகிறது. சூரவாதித்த சோழன் என்பவன் நாகராசன் மகள் காந்திமதியென்பாளை மணந்து, நாகலோகத்திலிருந்து கொண்டுவந்த ஐந்து சிவலிங்கங்களை வெவ்வேறிடங்களில் தாபிக்க நினைத்திருந்தான் என்றும் அதற்குள் அவை ஐந்தும் இத்தலத்து மூலலிங்கத்துட் கலந்தன என்றும் அதனால் சுவாமி பஞ்சவர்ணேசுவரர் ஆயினார் என்றும் தலபுராணம் கூறுகிறது.

திருஞானசம்பந்த சுவாமிகள் பாடிய ஒரு திருப்பதிகம் மட்டுமே இத்தலத்துக்கு உள்ளது. திரிசிரபுரம் மஹா வித்துவான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய தல புராணம், உறையூர்க் காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்

(தொடர்ச்சி அடுத்த பக்கம்)

உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்

# திருச்சிராப்பள்ளி

பதிகவரலாறு : திருமூக்கீச்சரத்தில் இறைவரைப் பணிந்து பாடித் துதித்தபின்னர் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருச்சிராப்பள்ளி மலையினை அணைந்தருளினர். திருச்சிராப்பள்ளியில் விருப்பத்துடன் எழுந்தருளியுள்ள செழுஞ்சுடரும், யானைத்தோலைப் போர்த்திய கண்ணுதலாருமான சிவபிரானைக் கழல் பணிந்து மெய்ம்மகிழ்வெய்தி உள்ளங்குளிரச் சாத்திய விளக்கமான சொற்றமிழ் மாலை இதுவாகும்.

பண்—குறிஞ்சி] திருச்சிற்றம்பலம் [1-ம் திருமுறை

நன்றுடையானைத் தீயதிலானை நரைவெள்ளே(று)
ஒன்றுடையானை உமையொரு பாகம் உடையானைச்
சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறஎன்னுள்ளங் குளிரும்மே. 1

---

(58ம் பக்கத் தொடர்ச்சி)

முதலிய பிரபந்தங்கள் இத்தலத்துக்கு உள்ளன. இரயில் மூலமும் பேருந்துகள் மூலமும் மிக எளிதில் அடையக்கூடிய திருத்தலம்.

இறைவர் திருப்பெயர்—பஞ்சவர்ணேசுவரர்; இறைவியார் திருப்பெயர்—காந்திமதியம்மை; தீர்த்தம்—சிவதீர்த்தம்; தலவிருட்சம்—வில்வம்.

சிவம்,

பதிகப்பொழிப்புரை:—1. நன்றுடையவனும் தீயதில்லாதவனும், மிக வெண்மையான இடபம் ஒன்றை ஊர்தியாக உடையவனும், உமாதேவியாரை ஒரு பாகத்தில் உடையவனும், சென்றடையாத திருவுடையவனும், திருச்சிராப்பள்ளிக் குன்றைத் தனது உறைவிடமாகக் கொண்டவனுமான சிவபிரானைத் துதித்துப் பாட என் உள்ளம் மகிழ்ச்சியடையும்.

நன்றுடையான், தீயதிலான் — இவை திருச்சிராப்பள்ளித் தலத்தில் உள்ள இரு தீர்த்தங்கள் என்பர் திருத்தருமையாதீனக் குறிப்புரையாசிரியர். ஆனால் இவை தேவார காலத்துக்குப் பின் தோன்றியவை என்பது கோவை அறிஞர் திரு. சி.சு. கண்ணுயிரம் அவர்கள் கருத்து. நன்றுடையான்—வீடு பேற்றை உடையான்; தீயதிலான்—ஆணவமலமாகிய குற்றமில்லாதவன். இவையும் திரு. சி. சு. கண்ணுயிரம் அவர்கள் உதவிய உரைக் குறிப்பாகும். நன்றுடையான்—வரம்பில் இன்பமுடைமையாகிய நன்றுடையவன். தீயதிலான்—இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கியவன். (இவை இராணிப்பேட்டைப் புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனுர் அவர்கள் உதவிய குறிப்பு) பெரியபுராணப் பேருரை கண்ட சிவக்கவிமணி திரு.சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் பதிக உரைக் குறிப்பில் கூறுவதாவது :—

''நன்றுடையான், தீயதிலான்—இப்பதியில் உள்ள இரு தீர்த்தங்களின் பெயர். இறைவர் இயல்பு குறிப்பனவுமாம். சகல வேதாந்த வாக்கியங்களாலும் சிவபெருமானது தன்மைகள் இரண்டு விதமாகக் கூறப்படும் என்றும், அவற்றுள் ஒன்று முடிவிலா இன்பகுணமான ஒரே கனமாயிருத்தல் - மற்றையது துன்பங்களுக்கெல்லாம் மூலகாரணமான மலத்தின் இயைபு அநாதியேயின்மை என்று விரித்து விளங்கக் காட்டினர் நீலகண்டபாடியக்காரர். அவ்விரு தன்மைகளுமே ஈண்டு ''நன்றுடையானைத் தீயதிலானை'' என உபதேசித்தருளப் பட்டன என்ப,

நரை—நரைத்தல் என்பது வெண்மையாதலைக் குறித்தது. பின்னரும் வெள்ளேறு எனக் கூறியமையால் வெண்மையின் மிகுதி கூறப்பட்டதாகக்கொள்க.

சென்றடையாத திருவுடையான்—ஐச்வர்யம், வீர்யம், கீர்த்தி, செல்வம், ஞானம், வைராக்கியம் என்னும் ஆறு இறைமைக் குணங்களையும் இயல்பாகவே உடையவன் என்ற பொருளைத் தரும் பகவான் சிவபெருமான் என்பதாம். இவ்வாறு எல்லாச் செல்வங்களையும் இயல்பாகவே உடையவராகலின் அவரிடம் சென்று அடையவேண்டுவது ஒன்றும் இல்லை என்றவாறு. சென்றடையாத திரு - நல்வினைப் போகம் காரணமாக ஆன்மாக்களுக்கு வருவது போல வந்து அடையாது இயற்கையே ஆனதிரு. (திருத்தருமையாதீனக் குறிப்புரை). இவ்வாறின்றி 'எங்கும் நிறைதலாகிய இயற்கை 'திருவுடையவர்' எனப்பொருள் உரைத்தனர் சிவக்கவிமணியவர்கள். குளிர்தல் - உள்ளம் மகிழ்ச்சியடைதல்.

**கைம்மகவேந்திக் கடுவனொடிக் கழைபாய்வான்**
**செம்முகமந்தி கருவரையேறுஞ் சிராப்பள்ளி**
**வெம்முகவேழத் தீருரிபோர்த்த விகிர்தாநீ**
**பைம்முகநாகம் மதியுடன்வைத்தல் பழியன்றே. 2**

2. சிவந்தமுகத்தையுடைய பெண் குரங்கு ஆண் குரங்கோடு ஊடல் கொண்டதால் தனது குட்டியைத் தூக்கிக் கொண்டு மூங்கிலின்மேல் பாயும் பொருட்டுக் கரியமலையின் மீது ஏறும் திருச்சிராப்பள்ளியில் எழுந்தருளிய தலைவனே! கொடுமையுடைய யானையின் உரித்த தோலைப் போர்த்திய விகிர்தனே! நீ படத்தையுடைய பாம்பைச் சந்திரனுடன் ஒரு சேர வைத்தல் பழியாகாது. (பழியன்றே என்பதில் உள்ள ஈற்றேகாரத்தை அசையாகக் கொண்டு 'பழியன்று' அச்செயல் உன் பேரருளே எனக் கொள்க.) அல்லது 'ஏ' காரத்தை வினாவாகக் கொண்டு 'பழியல்லவா' எனவும் கொள்ளலாம்.

மந்தம்முழவம் மழலைததும்ப வரைநீழல்
செந்தண்புனமுஞ் சுனையுஞ்சூழ்ந்த சிராப்பள்ளிச்
சந்தம்மலர்கள் சடைமேலுடையார் விடையூரும்
எந்தம்மடிகள் அடியார்க்கல்லல் இல்லையே. 3

3. முழவங்கள் மென்மையாக மழலைபோல ஒலித்தலை யுடையதும், மலையின் அடிவாரத்தில் குளிர்ச்சியுடைய வயல்களும் சுனைகளும் சூழ்ந்ததுமான திருச்சிராப்பள்ளியில் கோயில் கொண்டவரும், சடையின்மேல் அழகியமலர்களை உடையவரும், விடையூர்பவரும், எமது கடவுளுமாகிய சிவபெருமானது அடியவர்களுக்குத் துன்பம் என்பதே இல்லை.

துறைமல்குசாரற் சுனைமல்குநீலத் திடைவைகிச்
சிறைமல்குவண்டுந் தும்பியும்பாடுஞ் சிராப்பள்ளிக்
கறைமல்கு கண்டன் கனலெரியாடுங் கடவுள்ளெம்
பிறைமல்குசென்னி யுடையவனெங்கள் பெருமானே. 4

4. நீர்த்துறைகள் நிறைந்த மலைச்சாரலில் நீர்ச்சுனை களில் நிறைந்து பூத்திருக்கும் நீலமலர்களிடையில் தங்கி இறகுகளையுடைய வண்டுகளும் தும்பியும் பாடுகின்ற திருச் சிராப்பள்ளியில் கோயில் கொண்ட விடத்தின் கறை பொலி வுடன் விளங்குகின்ற திருக்கழுத்தையுடையவரும், எரி யாடும் கூத்தனும், பிறைச்சந்திரன் ஒளிசெய்கின்ற சென்னி யுடையவனுமாகிய சிவபெருமானே எங்கள் தலைவராவார்.

தும்பி—பெண்வண்டு; ஆண்வண்டுகளும் பெண்வண்டு களும் நீர்ப்பூக்களில் தங்கிப் பாடுகின்ற திருச்சிராப்பள்ளி என்பது அந்நகரில் உள்ள ஆண்களும் பெண்களும் கோயிலுக் குச் சென்று இறைவரது புகழ்களைப் பாடுகின்றனர் என்ற குறிப்பினை உட்கொண்டதாம். கறை—விடம், பெருமான்—தலைவன்.

**கொலைவரையாத கொள்கையர்தங்கள் மதில்மூன்றும்**
**சிலைவரையாகச் செற்றனரேனுஞ் சிராப்பள்ளித்**
**தலைவரைநாளுந் தலைவரல்லாமை யுரைப்பீர்காள்**
**நிலவரைநீல முண்டதும்வெள்ளை நிறமாமே. 5**

5. கொலைத் தொழிலை நீக்காத கொள்கையுடைய திரிபுரத்தசுரர்களுடைய மதில்கள் மூன்றையும் மலையையே வில்லாகக் கொண்டு அழித்தனரேனும், திருச்சிராப்பள்ளியில் கோயில் கொண்ட அப்பெருமானைத் தலைவர் அல்லர் என்று உரைப்பவர்களே! நிலத்தின் மேல் நீலமான விடத்தை உண்டதும் வெள்ளைநிறமாமோ? (ஆகாது என்றவாறு).

செற்றனரேனும் என்பது "அச்செயல் ஒன்றே அவர் தலைவர் என்பதை நிலை நாட்டப் போதுமானதாயிருந்தும்" என்ற குறிப்பை உட்கொண்டதாம். இத்திருப்பாடல் சிவ பிரானே முழு முதற்கடவுள் என்பதை வலியுறுத்துகின்றது. இப்பாடலின் கருத்தை குறிப்பாக ஈற்றடியின் கருத்தைப் பற்றிய சில அறிஞர்களின் விளக்கக் குறிப்புகளைக் கீழே காண்க:

1. இராணிப்பேட்டைப் புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனுர் அவர்கள் கருத்து-

இந்நிலவுலகத்தில் ஆலகாலவிடத்தின் கொடுமையால் உடம்பு நீலநிறமாக மாறிய தெய்வமும் அதன் முன் வெண்ணிறமாயிருந்ததேயாம். (திருமால் விடத்தின்கொடுமையால் நீல நிறமடைந்தார் என்பது குறிப்பிடப்படுகிறது—ஆசிரியர்).

2. கோவை அறிஞர் திரு. சி. சு. கண்ணுயிரம் அவர்கள் கருத்து.

திரிபுர தகனமும் மலையை வில்லாக வளைத்தலும் யாராலும் இயலாது. இச்செயல்கள் மட்டுமே சிவபெருமான் சர்வ வல்லமையுள்ள முழுமுதற் கடவுள் என்பதை நிலை

நாட்டும். இவற்றை அவர் செய்தது அறிந்திருந்தும் அவரை முழுமுதற் கடவுள் அல்லர் என்று கூறுவதும் கடவுளே இல்லை என்று பிதற்றுவதும் சிவாபராதம். அப்பாவம் செய்பவரை நன்னெறிப்படுத்துவது இயலாது. அஃது அவுரி நீலம் தோய்த்த வெண்துகிலை மீண்டும் வெள்ளைநிறமாக்கு வது எவ்வாறு இயலாதோ அவ்வாறு முடியாத செயல் என்றவாறு.

*பரிபாடல் - அதிகப்பாடல் - 1 - வரி 75 - 78:—*

'பணிவில் சீர்ச் செல்விடைப்பாகன் திரிபுரஞ் செற்றுழிக் கல்லுயர்சென்னி இமயவில் நாணுகித் தொல் புகழ் தந்தா ரும் தாம்'

இது வைணவர்கள் தங்களது என்று உரிமை கொண்டா டும் பரிபாடல் பகுதி. திரிபுரதகனமும் மலையை வில்லாக வளைத்ததும் கூறுவது. மேலும் பணிவில் சீர் - தன்னைப் பிறர் பணிதலன்றித்தான் பிறரைப் பணியாதவன் என்று சிவ பரத்துவம் நிலைநாட்டுவது. ஆனுல் இன்றைய வைணவர்கள் சிவபெருமானை முழுமுதற்கடவுளல்லர் என்று ஆரவாரிக் கின்றனர்.

(சமண நூலாகிய சிந்தாமணியில்) சீவகன் பிறந்த பின் மறைந்து வளர்தலைக் கண்ணன் ஆயர்பாடியில் கரந்து வளர்ந்ததுக்கு ஒப்பிடும் நூலாசிரியர் 'புண்ணியன் எய்த கணைபோல்' என்று கண்ணனைக் குறிக்கின்ருர். திரிபுர தகனத் தில் திருமால் கணையாகப் பயன்பட்டதைக் கூறுவதால் இவர் சிவபெருமான் இருப்பைக் குறிப்பிடுகின்ருர். ஆனுல் சமணர்கள் கடவுள் இல்லை என்போராவர்.

3. Dr. M. குப்புசுவாமி அவர்கள், பெங்களூர். (தில்லியூர்ச் சிவனடியார்)

திருச்சிராப்பள்ளித் திருப்பதிகப்பாடல் (5) பற்றி எனக்குத் தெரிந்த அளவு எழுதுகிறேன் :

முதலிரண்டு அடிகளில் பொல்லாத கொள்கைப் புர

மூவரைச் செறுதற்கு மேருவை வில்லாகக் கொண்டெழுந்த செய்தி பேசப்பட்டது. இவ்வாறு யாரும் செயற்கரிய செய்தனர் நம் தலைவர். பிறரொருவர் துணையின்றியே புரஞ்செற்ற புன்னகையாளர்தம் பீடு குறிப்பாற் சுட்டப் பட்டது. இது தெரிந்தும், ஒரு தனித்தலைவர் இவரே எனத் தேரமாட்டாது மருளுறும் சிராப்பள்ளியூர்ப் புற நெறியாளர்களை விளித்துப் பிள்ளையாரவர்கள் பின்னிரண்டு அடிகளில் கேட்கின்றார்கள். ''ஆலாலம் எழுந்தபோது பிரமன் விண்டு உள்ளிட்ட தேவர் பலரும் வாடிய முகமும் வருத்தமுங்கொண்டு நாடி 'இறைவா, நம' என்று வணங்க, எம்பிரான் நீலமுண்டு காத்தனரே, இதுவும் வெளிறு (வெள்ளை நிறம்) ஆமோ? பொய்யாமோ என் கின்றனர். ''வெளிறு'' எனுஞ் சொல் திருக்குறள் 503ல் வழங்கப்பட்டதுபோல், ''வெற்றுரை, பொய்'' எனுங் குறிப்பு நுதலிற்று. வெளிறு ஆமோ ? வீண் சொல்லோ? நேரடியாகத் தேவரெல்லாம் வந்து வணங்கினரே, இதற்கு என்ன சொல்கிறீர்கள் என்றவாறு. எனவே 'மூவரைப் பொடித்ததைப் பொருட்படுத்தாவிடினும், ஏனைய தேவ ரெல்லாம் ஆலநஞ்சின் கொடூரம் தாங்கமாட்டாராய், அடைக்கலம் வேண்டிச் சிவபிரானை வணங்கி நின்றனரே, சிவபிரான்தானே ஆலமுண்டு காத்தார் ? இதிலிருந்தே எந்தையாரே தலைவர் என்று தெளிமின்கள்' எனத் திருஞானசம்பந்தப் பெருமான் அறிவுறுத்தும் திறம் இதுவாகும்.

4. சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் தந்துள்ள உரைக்குறிப்பு

நிலவரை—நிலத்தின் மேல், நீலம்—நீல நிறமுள்ள விடம், ஆகு பெயர். ஆமே—ஆமோ? வினா. நீலம் நீல மாயே இருத்தலின் தலைவர் என்பதே துணிக என்று உணர்த்தி நின்றது. நீலம் வெள்ளையாயினன்றோ அவர் தலைவரல்லாமை உரைத்தல் கூடும்.

5. திருத்தருமையாதீனக் குறிப்புரை:—நிலவரை நீலம் பூமியிலுள்ள நீலப்பூக்கள். உண்டதும் வெள்ளை நிறமாமே—உண்டதும் வெள்ளை நிறமாகவா போய்விடும் என்றது தலைவரைத் தலைவரல்லர் என்று சொல்வதால் அவர் தலைவரல்லராகார் என்று உவமை காட்டி மறுத்தவாறு.

வெய்யதண்சாரல் விரிநிறவேங்கைத் தண்போது
செய்யபொன்சேருஞ் சிராப்பள்ளிமேய செல்வனுர்
தையலொர்பாகம் மகிழ்வர்நஞ்சுண்பர் தலையோட்டில்
ஐயமுங்கொள்வர் ஆரிவர்செய்கை அறிவாரே. 6

6. விரும்பத்தக்க குளிர்ச்சியுடைய மலைச்சாரலில் விரிகின்ற அழகுடைய வேங்கைமலர்கள் செம்மையான பொன் போலும் நிறத்தனவாய் நிலத்தையடைகின்ற திருச்சிராப்பள்ளியில் விரும்பி எழுந்தருளியிருக்கும் செல்வனுராகிய சிவபெருமானுர் உமாதேவியாரை ஒரு பாகமாக இருத்தி மகிழ்ச்சியையடைவர், விஷத்தை உண்பர், தலையோட்டில் பிச்சையும் எடுப்பார். இவரது இத்தகைய செயல்களை யாரே அறிவர்? (ஒருவரும் அறியார் என்றவாறு). இறைவரது செயல்கள் ஒன்ருெடொன்று ஒத்தனவல்லவாயிருத்தலின் 'யார் அவர் செய்கை அறிவார்' எனக் கூறியருளினுர்.

வேயுயர்சாரல் கருவிரலூகம் விளையாடும்
சேயுயர்கோயிற் சிராப்பள்ளிமேய செல்வனுர்
பேயுயர்கொள்ளி கைவிளக்காகப் பெருமானுர்
தீயுகந்தாடல் திருக்குறிப்பாயிற் ருகாதே. 7

7. மூங்கில்கள் உயர்ந்து வளரும் மலைச்சாரலில் கரிய விரல்களையுடைய கருங்குரங்குகள் விளையாடுகின்ற திருச்சிராப்பள்ளியில் மிக்க உயர்ந்த கோயிலில் விரும்பி எழுந்தருளியிருக்கும் செல்வனுராகிய சிவபெருமான், நீண்டு

உயர்ந்த பேய்கள் கைகளில் பிடித்துள்ள எரிகொள்ளிகளையே கைவிளக்காகக் கொண்டு தீயை விரும்பி ஆடுதல் திருக் குறிப்பாயின் அஃது ஆகாதோ? (ஆகும் என்றவாறு).

இத்திருப்பாடலின் பின்னிரண்டு அடிகளின் விளக்கம்:— பேய்கள் கையில் பிடித்துள்ள எரிகொள்ளியே விளக்காக இறைவர் தீயில் நடனமாடுவது அவர் உலகங்களை மீண்டும் படைக்க விரும்பும் திருக்கூத்தாகும். தீ - ஸர்வசங்கார காலத்தில் அனைத்தையும் அழிப்பது. இங்கு அம்பிகை கூறப் படவில்லை. அவளும் அப்பனுடன் ஒடுங்கிய நிலை. இந்நிலை யின் அவன் ஆடுவது புனருற்பவம் செய்ய வேண்டும் என்ற திருக்குறிப்பு. இக்கூத்தால் முதலில் உமை வெளிப்பட்டுப் பின் நாதம் முதல் ஒவ்வொரு தத்துவங்களாகத் தோன்றி உலகங்கள் உளவாகும். (கோவை அறிஞர் திரு. சி. சு. கண்ணுயிரம் அவர்கள் உதவிய உரைக் குறிப்பு)

**மலைமல்குதோளன் வலிகெடவூன்றி மலரோன்றன்**
**தலைகலனுகப் பலிதிரிந்துண்பர் பழியோரார்**
**சொலவலவேதஞ் சொலவலகீதஞ் சொல்லுங்கால்**
**சிலவலபோலுஞ் சிராப்பள்ளிச்சேடர் செய்கையே.** 8

8. மலை போன்ற திண்ணிய தோள்களையுடைய இராவணனது வலிமை கெடுமாறு ஒரு திருவிரலால் ஊன்றி யும், பிரமதேவனது தலையையே பாத்திரமாகக் கொண்டு பிச்சையேற்று உண்பவராயும் (அதனுல் வரும்) பழியை ஆராய்ந்து பார்க்கமாட்டார். இத்தகைய இறைவரது பெருமையைச் சொல்லவல்ல வேதங்களையும், அவ்வாறே சொல்லவல்ல கீதங்களையும் ஓதும்பொழுது திருச்சிராப்பள்ளி யில் எழுந்தருளியுள்ள முற்றறிவுடையவராகிய இவரது பெருமைமிக்க அருட்செயல்களும் வீரச்செயல்களும் சில வல்ல (அவை பலப்பலவாக விரியும்) என்பதாம்.

வேதமும் கீதமும் சொன்னுலும் சேடர் செய்கை அளப் பரிதாகையால் (சில அல) அவ்வேதமொழிகளாலும் கீதங்

களாலும் முற்றுற மொழிதற்கு அடங்கா. (இது இராணிப் பேட்டைப் புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனுர் உதவிய கருத்து)

அரப்பள்ளியானும் மலருறைவானும் அறியாமைக்
கரப்புள்ளிநாடிக் கண்டிலரேனுங் கல்சூழ்ந்த
சிரப்பள்ளிமேய வார்சடைச்செல்வர் மனைதோறும்
இரப்புள்ளிரும்மை ஏதிலர்கண்டால் இகழாரே. 9

*9.* பாம்பைப் படுக்கையாகக் கொண்ட திருமாலும் தாமரைமலர்மேல் உறைபவனுன பிரம்மதேவனும் ஆகிய அவர்கள் அறியாவண்ணம் (உமது திருவடியும் திருமுடியும்) மறைந்திருத்தலை நினைத்துத் தேடிக்காணுர்களாயினும் மலை சூழ்ந்த திருச்சிராப்பள்ளி மேய நீண்ட சடையையுடைய செல்வராகிய நீர் இல்லங்கள்தோறும் சென்று பிச்சையேற்றலை மேற்கொண்டால் அதை மற்றவர்கள் கண்டால் உம்மை இகழ்வர் என்பதாம்.

''பிரமதேவனும் திருமாலும் காண்பதற்கு அரியவராகி நின்ற பெருமான் யாவரும் காணும் வண்ணம் இல்லங்கள் தோறும் சென்று பிச்சையெடுத்தால் அவரை மற்றவர்கள் இகழ்வார்களே! எனவே அப்பெருமான் பிச்சையெடுத்தலின் உட்குறிப்புதான் யாதோ?'' என்பது கருத்து.

நாணுதுடைநீத் தோர்களுங்கஞ்சி நாட்காலை
ஊணுப்பகலுண் டோதுவோர்கள் உரைக்குஞ்சொல்
பேணுதுறுசீர் பெறுதுமென்பீரெம் பெருமானுர்
சேணுர்கோயில் சிராப்பள்ளிசென்று சேர்மினே. 10

*10.* பெறத்தக்க பெருஞ்சிறப்பு பெறுவோம் என்று விரும்புகின்றவர்களே! சிறிதும் நாணமின்றி உடை நீத்துத் திரியும் சமணர்களும், கஞ்சியை விடியற்காலை உணவாகவும் பகலுணவாகவும் உண்டு ஓதுபவர்களாகிய பௌத்தர்களும்

கூறுஞ்சொற்களைச் சிறிதும் மதியாது எமது பெருமானாரது விண்ணளவுயர்ந்த கோயிலையுடைய திருச்சிராப்பள்ளியைச் சென்றடையுங்கள். (அங்குச் சென்றால் நீவிர் பெறவிரும்பிய சிறப்பைப் பெறலாம் என்பதாம்). ''சிராப்பள்ளிச் சென்று சேர்மின்களே'' என்று அருளினரேனும், ''சிராப்பள்ளி சென்று எம்பெருமானாரைச் சேர்மின்களே'' என்பதே பிள்ளையாரது திருவுள்ளக் கிடக்கையாகக் கொள்க.

**தேனயம்பாடுஞ் சிராப்பள்ளியானைத் திரைசூழ்ந்த**
**கானல்சங்கேறுங் கழுமலவூரிற் கவுணியன்**
**ஞானசம்பந்தன் நலம்மிகுபாடல் இவைவல்லார்**
**வானசம்பந்தத் தவரொடுமன்னி வாழ்வாரே. 11**

திருச்சிற்றம்பலம்

*11.* வண்டுகள் நயம் நிறைந்த இசைபாடும் திருச்சிராப்பள்ளியில் கோயில் கொண்ட சிவபெருமானை, அலைகள் சூழ்ந்த கடற்கரைச் சோலைகளில் சங்குகள் (அலைகளால் உந்தப்பட்டு) ஏறும் திருக்கழுமலம் என்றொரு பெயர்பெற்ற சீகாழியில் தோன்றிய கவுணியர் கோத்திரத்தைச் சேர்ந்த திருஞானசம்பந்தன் துதித்துப் பாடிய நன்மை மிக்க பாடல்களாகிய இவை வல்லவர்கள், உயர்ந்த உலகமாகிய சிவலோகஞ் சேர்ந்து அதனுடன் சம்பந்தப்பட்ட அடியார்களோடு நிலைபெற்று வாழ்வார்கள்.

தலவரலாறு, காவிரி தென்கரையில் 6-வது தலமான திருச்சிராப்பள்ளி தற்காலம் திருச்சினாப்பள்ளி என்றும் வழங்கப்படுகிறது. ஆதிசேடனுக்கும் வாயுவுக்கும் நேர்ந்த போரில் வாயுவினால் மஹாமேருவின் மூன்று சிகரங்கள் தகர்க்கப்பட்டதாகவும் திருச்சிராப்பள்ளி அவற்றில் ஒன்று என்றும் கூறுவர். திரிசிரன் என்பான் பூசித்த காரணத்தால் இப்பெயர் பெற்றது என்றும் கூறப்படுகிறது. பிரமதேவன், இராமன், அனுமான், இந்திரன், நாககன்னியர்

அகத்தியர் முதலாயினோர் பூசித்ததாகவும் தலபுராணங் கூறுகிறது. ஒரு வணிகப்பெண்ணின் தாய் போல வந்து இறைவர் பிரசவம் பார்த்தமையால் தாயுமானுர் என்று வழங்கப்படுகிருர். மாதுருபூதேசுவரர் என்பது வடமொழிப் பெயர். மலேச்சிகரத்தில் உச்சிப்பிள்ளேயார் மிகப்பிரசித்தம். இத்தலத்தில் விளங்கிய மௌன சுவாமிகளிடம் தாயுமான சுவாமிகள் அருளுபதேசம் பெற்ருர். மௌனமடம் திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமை ஆதீன நிர்வாகத்தில் சிறந்து விளங்குகிறது.

சரித்திர காலத்திலும் கி. மு. 2ம் நூற்ருண்டுக்கு முன்பே விளங்கிவரும் இத்தலம் இன்றும் தமிழ்நாட்டுப் பெருநகரங்களுள் ஒன்ருக விளங்குகிறது. திருஞான சம்பந்த சுவாமிகள் ஒரு பதிகமும் அப்பர் சுவாமிகள் ஒரு பதிகமும் இத்தலத்தில் பாடியுள்ளனர், மிகப்பெரிய நகரமாகையால் தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் பேருந்துகள் மூலம் இதை அடையலாம். திருச்சிராப்பள்ளிக் கோட்டை இரயில் நிலயத்திலிருந்து கிழக்கே சுமார் 1 கி. மீ. தொலேவில் உள்ளது.

இறைவர் திருப்பெயர்கள்—தாயுமானவர், திருமலேக்கொழுந்தர், செவ்வந்திநாதர் முதலியன. இறைவியார் திருப்பெயர்—மட்டுவார் குழலம்மை (வடமொழியில் சுகந்த குந்தளாம்பிகா). தீர்த்தம் - நன்றுடையான், தீயதில்லான், காவிரி, சிவகங்கை, பிரமதீர்த்தம் முதலியன



சிவம்,

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

## திருஞானசம்பந்த சுவாமிகள் துதிப்பாடல்கள்

1. வெங்குருவில் கவுணியர்தங் குலத்துதித்து
 மீனவன்றன் வெப்புங் கூனும்
 எங்குமிசை பெறமாற்றி அமணரெண்ணு
 யிரங்கழுவி லிறக்க வேற்றிப்
 பங்கமிலென் பரிவையுருப் படைத்துயிர்பெற்
 றெழப்பதிகம் பாடி மேன்மை
 தங்குமறைத் திருஞான சம்பந்தன்
 தாட்டுணைகள் தலைமேற் கொள்வாம்.

—வரதராச கவிராசர் (சிவராத்திரி புராணம்)

2. அரனிடத்தாள் திருமுலைப்பா லயின்ற வாற்றால்
 அரியதமிழ் தெரியநனி புகன்ற வாற்றால்
 பரனிடத்தா மதமகற்றி யருள்செய் யாற்றாற்
 பன்னுமண முன்னுமறைப் படியே செய்தும்
 வரனுறத்தான் சிறுநலத்தை விரும்பா வாற்றால்
 மாறிவரு ளாறுமுகப் பெருமான் றானே
 திரனுறத்தன் னிகரெனச்சொல் பெருமை வாய்ந்த
 திருஞான சம்பந்தன் திருத்தாள் போற்றி.

—யாழ்ப்பாணம் சிவப்பிரகாச பண்டிதர்
(திருக்கழிப்பாலைப்புராணம்)

சிவம்.



உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

## வாழ்த்து

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது.

---




உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்



**யத்யத் கர்ம கரோமி**

**தத்ததகிலம்**

**சம்போ தவாராதனம்**



Elango Achukoodam, 166, R. H. Road, Ms-4: Tel: 74121.